# கம்ப ராமாயணம் காம ரசந்தானா?

அறிஞர் அண்ணாத்துரையின் கம்பரசம்
என்ற நூலுக்கு மறுப்பு



அண்ணாத்துரையின் கம்பரசம்
அதிவிநோதக் காமரசம்
கன்னா பின்னாக் கதையாகிச்
சின்னா பின்னப் படுகுதையோ!

தமிழ் இந்தியா ஆபீஸ்,
36, வெங்கடாசல முதலி தெரு,
பார்க் டவுன். சென்னை-3.

BRANCH AT
FREE INDIA PREMISES,
SUBHADRABAI MANSIONS,
53, GENERAL PATTERS ROAD,
MOUNT ROAD P O, MADRAS-2

# கம்பராமாயணம் காமரசந்தானு ?



அறிஞர் அண்ணுத்துரையின் கம்பரசம் என்ற
நூலுக்கு மறுப்பு.

377



தமிழ் இந்தியா ஆபீஸ்
36, வேங்கடாசல முதலி தெரு,
பார்க் டவுன், :: சென்னை 3.



BRANCH AT:
FREE INDIA PREMISES
"Subhadrabai Mansions"
53, General Patter's Road,
Mount Road, MADRAS 2.

# கம்பராமாயணம் காமரசந்தானா ?

## கையெழுத்துப் பிரதியைப் படித்தவர் கூறியவை.



" அறிஞர் அண்ணாத்துரை யளிக்கும் ஒன்பது கசப்பு டோஸ்களையும் இனிப்பாக மாற்றுகிறது.

" தாங்கள் அளிக்கும் மம்மர் மாய்க்கும் மருந்து, கம்பரது பெருமையை காட்டித் தருகிறது.

" வில்லின் செல்வனாகிய இராமனின் பக்தன் சொல்லின் செல்வனாகிய அனுமன் என்பதைத் தாங்களன்றோ எக்ஸ்ரே மூலம் எடுத்துக் காட்டுகிறீர்கள் !

" பள்ளியில் படிப்போரும், கல்லூரியில் பயில்வோரும் கையில் தரிக்கவேண்டிய நூல்.

" தங்களது நூல் தமிழரது இதயத்தைக் குளிரச் செய்யும்.

" தாங்கள் காட்டிய கையெழுத்துப் பிரதி என் கண்களைத் திறந்தன.

" ஒவ்வொரு மறுப்பும் மிக நேர்மையான வழியில் அமைந்துள்ளது.

" நகைச்சுவை நிறைந்துள்ளது.

" கம்பரின் ஒழுக்கத்தை வெளிப்படுத்துகிறது.

" ஆரம்பம் முதல் முடிவு வரை விடாமல் படித்தேன்.

" இழந்த புகழைத் திரும்பப் பெறுகிறார் கம்பர்.

" கம்பன் கவிதை, தமிழன் பெருமை.



[சென்னை அரசாங்கத்தின் தமிழ்மொழிக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையின் மணி மொழிகள். **ஆரியராவது, திராவிடராவது!** என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. மாணவரும் மற்றோரும் மனப்பாடம் செய்யவேண்டியவை.]

—எழுத்தாளர்களின் பொறுப்புகள் எண்ணிக்கையற்றவை. கடமைகளும் கணக்கற்றவை.

—நல்லவர்களும் உண்மைகளைத் திரிபாகத் தீர்மானித்துக்கொண்டு தெரியாமலேயே தீங்கு செய்துவிடலாம்.

—'கற்றோர் இதயம்' என்ற காணாத இடத்தில் வீற்றிருப்பவன் கம்பன்.

—வடமொழியைத் தமிழில் புகுத்தி அகத்தியரும் தொல்காப்பியரும் தமிழைக் கெடுத்து விட்டார்கள் என்பது அறிவின்மை.

—தமிழ் மொழி என்பது மாங்காய் தேங்காய் போல மரத்தில் காய்த்து நம் கையில் விழுந்து விடவில்லை.

—இப்போது இருந்து வருகிற தமிழ் பழைய நிலைக்கே போகவேண்டு மென்று விரும்பினால், அது வயிரம் தன்னுடைய பழைய நிலைக்கே போய் கரியாகப் போவதைத் தான் காணும்.

—தனித் தமிழ் என்ற ஒரு தமிழ் எப்போது இருந்ததோ, எங்கிருந்ததோ அறிய முடியவில்லை.

—தமிழ் மட்டும் அல்ல, பல மொழிகளைப் பேசுகின்ற பல நாட்டு மக்களுடன் பழகி வருகின்ற எவருடைய மொழியும் கலப்பில்லாத தனி மொழியாக இருக்க முடியாது.

—எல்லோருக்கும் எளிதில் புரியக்கூடிய எந்தப் பதத்தையும் அதைப் பிறமொழிப் பதம் என்பதற்காக விலக்க முயல்வது விரும்பத்தக்கதல்ல.

—தமிழோடு தமிழாகக் கலந்துவிட்ட பிறமொழிப் பதங்களைப் பொறுக்கி நீக்குவது பிழை.

—(தமிழில்) பிறமொழிப் பதங்கள் கலக்கத்தான் நேரும். பிற மொழியிலுள்ள நல்ல கருத்துக்களையும் சேர்த்துக்கொள்ளத்தான் வேண்டும்.

—பிரபந்தங்களில் பொதிந்து கிடக்கும் இலக்கியச் சுவைகள் எண்ண முடியாதவை.

—(திருக்குறளில்) மூன்றடி மண் கேட்டு இரண்டே அடியில் மண்ணையும் விண்ணையும் அளந்துவிட்ட திருவிக்கிரம நாராயணன் கதை வருகிறது.

—இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னேயே வடமொழி இலக்கியங்களான பாரதத்தையும் இராமாயணத்தையும் தமிழர்கள் எவ்வளவோ உரிமையோடு எடுத்தாண்டிருக்கிறார்கள்.

—ஆரியக் கதைகளை யாரோ வடநாட்டார் வந்து தமிழில் புகுத்தி விட்டார்கள் என்பது வெறும் பொய்.

—இப்போது தமிழ் நாட்டின் கோயில்களில் கும்பிடப்பட்டு வரும் தெய்வங்களையெல்லாம் நீக்கி விட்டால் நமக்கு மிஞ்சுவது வீரன் இருளன் காட்டேரி பாவாடை முதலிய தெய்வங்கள்தான்.

—உண்மையில் தமிழ் நாட்டில் ஆரியர்களும் இல்லை, திராவிடர்களும் இல்லை.

—தமிழ் இலக்கியங்களில் எந்த இடத்திலும் தமிழனை திராவிடன் என்று சொன்னதில்லை.

—பார்ப்பனர்கள் எங்கேயோ இருந்து வந்து புகுந்து கொண்டவர்கள் அல்ல.

—கோயில்களில் பார்ப்பனர்கள் ஆதிக்கம் பெற்று விட்டது அவர்களுடைய தந்திரத்தாலோ மந்திரத்தாலோ அல்ல. அக்காலத்திலிருந்த தகுதியினால் தமிழ் மன்னர்களும் தமிழ் மக்களும் தாங்களாகவே தந்த பெருமை.

—'பாவம்' என்று பயப்படுகிறவர் இப்போது யார் இருக்கிறார்கள் என்று நாம் எண்ணலாம். எனினும் இந்த 'பாவம்' 'புண்ணியம்' என்ற பதங்களின் அவசியம் மீண்டும் உலகத்தில் விரைவில உண்டாகுமென்றே நம்பலாம்.

—தமிழ் நாட்டிலுள்ள பார்ப்பனர்கள் ஆரியர்கள் அல்ல.

—தமிழில் ஆன்ம விசாரணை நூல்கள் இல்லை. அதை ஒப்புக்கொண்டதில் தமிழருக்கு அவமானம் இல்லை.

—தமிழர்கள் தங்களைத் திராவிடர்கள் என்று சொல்லிக்கொள்வதும் அறியாமை.

—யாரோ அன்னியர்கள் தமிழர் நாட்டை 'திராவிடம்' என்று சொன்னதற்காக தமிழர்கள் தங்களைத் திராவிடர் என்று சொல்லிக்கொள்வது சரியல்ல.

—ராமன் ஆரியனாக இருக்கலாம். ஆனால் ராவணன் தமிழன் அல்ல. ஏன் எனில் இலங்கையில் இருந்தவர்கள் தமிழர் அல்ல. இலங்கையின் மொழியும் தமிழல்ல.

—தமிழ் மாகாணத்தில் தமிழன் தனியரசு கொண்ட பின் இந்திய நாட்டை மறந்துவிடக்கூடாது. மறந்தால் தமிழ் மாகாணத்தின் தனியரசும் தடுமாறிவிடும்.

—சேரனும், சோழனும், பாண்டியனும் காட்டிய செந்நெறிகளில் செல்ல வேண்டும். அப்போதுதான் திருவள்ளுவரைப் போன்ற மகாத்மாக்கள் தோன்றுவார்கள். கம்பனைப் போன்ற கவிஞன் பிறப்பான்.

—தமிழ்ப் பண்பு என்பது, தமிழ் மக்களின் இயல்பும், தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மரபும், தமிழ் மொழி இலக்கியங்களின் போக்கும் ஆகிய இந்த மூன்றும் கலந்து தொகையான குணம்.

—தமிழ்ப் பண்பு இறைவன் உண்மையை மறுக்காது, தெய்வ நிந்தனை பொறுக்காது, பெரியோரைப் பிழை சொல்லாது, முன்னோர்களை மூடர்களாக்காது, பழைமையைப் பழிக்காது, நிகழ்கால அவசரத்தால் நிதானம் தவறிவிடாது, எதிர்கால ஆசைகளுக்காக எதையும் செய்துவிடாது. *



* ஆரியராவது, திராவிடராவது? நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை எழுதியது, விலை ரூபாய் ஒன்றரை. தமிழ்ப் பண்ணை, தியாகராயநகர், சென்னை. (ஒவ்வொரு தமிழனும் படித்து அறிய வேண்டிய நூல்.)

'கம்பன் கவிதை' என்ற நூலில்,

**ராவ் சாஹிப் வ. ப. சுப்பிரமணிய முதலியார்.**

"கடவுள் சிருட்டியாகிய பிரபஞ்சம் போலக் கம்பர் சிருட்டியாகிய கம்பராமாயணமும் நுணுகி நுணுகி நோக்குந்தோறும் நூதன நூதனமான வனப்புக்களும் உண்மைகளும் புலப்படுத்தி மேலும் மேலும் விளக்குவதாய் வியப்பும் நயப்பும் விளைப்பதாயுள்ளது."

* * *

**வித்துவான் சு. கிருஷ்ணஸ்வாமி முதலியார்.**

"இயற்கைத் தத்துவம் கடவுட்டன்மை தர்ம மார்க்கம் இவற்றைச் சொல்லுமிடங்களில் கம்பரது பக்திப் பெருக்கமானது ஹோமரை மீறிச் சென்று மில்டனோடு தோள் தட்டி நிற்கின்றது."

* * *

**திரு. ஏ. ஸி. பால் நாடார், பி.ஏ., பி.எல்.**

"தமிழருக்கும் தமிழுக்கும் கம்பர் பெருமை கொடுக்கிறார்."

* * *

**திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார், பி.ஏ., பி.எல்.**

"வால்மீகி, காளிதாஸர், டாகூர், ஷேக்ஸ்பியர், ஹோமர் இவர்களுடைய ஜாதிதான் கம்பர் ஜாதி."

* * *

**திரு. பொ. திருகூடசுந்தரன், எம்.ஏ., பி.எல்.**

"யாரும் கம்பனைத் தூக்கத் தயங்கவேண்டிய அவசியமில்லை."

* * *

**திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல்.**

"கம்பர் கவித்திறம் அறிந்து போற்றத்தக்கதாகும்."
என்றெல்லாம் புகழ்ந்துள்ளனர்.

# கம்பராமாயணம் காமரசந்தானு?

# முன்னுரை.

ஆங்கிலக்கவி ஷேக்ஸ்பியரது நூல்களைப்பற்றிய ஆராய்ச்சிகள் கணக்கில் அடங்கா. ஷேக்ஸ்பியரது 'ஹாம்லெட்.' என்ற நாடகத்தைப்பற்றிய ஆராய்ச்சிகளடங்கிய புத்தகங்களை வைக்க ஒரு புத்தகசாலையே வேண்டும்!

கம்பர் தமிழ்க் கவிகளுள் சிறந்தவர். கம்பராமாயணத்தைப்பற்றிய ஆராய்ச்சிகளோ மிகச் சில. அறிஞர் அண்ணாத்துரையின் 'கம்ப ரசம்' ஒருவகை ஆராய்ச்சி. அதற்கு மறுப்பு இந்நால்.

'கம்ப ரசம்' என்ற நூல் தமிழ் நாட்டில் மாணவர்களாலும் மற்றோராலும் படிக்கப்பட்டு வருகிறது.

கம்பரைப்பற்றியும் அவரது இராமாயணத்தைப் பற்றியும் வெளி வரவேண்டிய ஆய்வு நூல்கள் இன்னும் பல வேண்டும். அதை மனத்திற் கொண்டே இந்நூல் வெளியிடப்படுகிறது.

இந்நூல் முழுதும் படித்தறிய வேண்டியதாகும். அங்கு ஒரு வாக்கியம் இங்கு ஒரு வாக்கியமாகப் பெயர்த்தெடுத்துக் குறைகூறப் புகாது, குற்றம் நீக்கிக் குணம் உண்டேல் காணும்படி வேண்டுகின்றோம்.

இந்நூலில் 'கூறியது கூறல்' உண்டு.

'கூறியது கூறினும் குற்றம் இல்லை
வேறொரு பொருளை விளக்குமாயின்'

பொது I

# தமிழரின் திருமால்

திருமால் வணக்கம் தமிழ் நாட்டில் எக்காலத்திலும் உண்டு. திருப்பதி, திருவரங்கம், திருமாலிருஞ்சோலை ஆகியவை பழைய திருப்பதிகள். ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற கோயில்கள் நூற்றிற்கு மேலானவை. திருமால் தமிழரது தெய்வமேயன்றி, வேறு நாட்டிலிருந்து வந்தவர் கொண்டுவந்த தெய்வமன்று. சங்க நூல்களில் திருமால் வணக்கம் காணப்படுவது அறியத்தக்கது.

திருமாலின் அவதாரங்கள் பல. இராமனும், கண்ணனும் வட நாட்டில் தோன்றியதனுல் வந்த தீங்கு ஒன்றுமில்லை.

பாலஸ்தீனத்தில் தோன்றிய ஏசுநாதரை உலகில் போற்ருத நாடு எது? புத்தரைத் திருமாலின் அவதாரம் என்றே கூறுவர். ஆயினும் திருமாலின் அவதாரங்கள் எல்லாம் போற்றப்படுவன அல்ல.

திருமால் உலகத்தில் தோன்றக் காரணம் யாது?

எத்தனையோ காரணங்கள் உள. தெய்வ நம்பிக்கையில் ஈடு பட்டவரைக் காப்பது ஒன்று. மற்றவர்களைத் திருத்துவது மற்ருென்று. பக்தர்களின் இச்சையைப் பூர்த்தி செய்யத் தோன்றுவது வேருென்று. மாந்தரது பிறப்பும் இறப்பும் ஊழ்வினையின் பயன். ஆனல் ஈசுவரனே தனது இச்சையால் உலகில் தோன்றுகிருன். அவன் வினைகளில் கட்டுப்படான். அயோத்தி இராமனது குணத்தைக் கண்டு மெச்சியது. கோகுலம் கண்ணனது இளமைக் குறும்பு கண்டு உவந்தது.

தான் உலகில் தோன்றி, மாந்தர் தன்னை மனித நிலையில் காணச் செய்வது திருமாலின் விசித்திரச் செயல் களுள் ஒன்று. தொண்டு செய்ய இச்சை கொள்பவர் களின் எண்ணத்தைப் பூர்த்தி செய்வதே இறைவனது நோக்கம். முதலையால் பிடிக்கப்பட்ட யானை, தனது கையில் தாங்கிய தாமரை மலரைத் திருமாலின் திருவடி களில் சேர்க்க, 'ஆதிமூலமே' என்று அழைத்த காலத்து, திருமால் நேரில் வந்து தோன்றியது நோக்கத்தக்கது.

இராமாயணத்தை எழுதிய வால்மீகியையும், பாரதத்தை எழுதிய வியாசரையும் குறை கூறுவதுண்டு. இராமனது பெருமையை எழுதப் புகுந்த வால்மீகி இராவணாதியர்களைப் பற்றியும் எழுதிக் கெடுத்தார். கண்ணனது பெருமையை எழுதப் புகுந்த வியாசர், காங்கேயன் கதையை எல்லாம் எழுதிக் கெடுத்தார். 'மறந்தும் புறந் தொழா மாந்தர்' செய்கைகளோ இவை என்பர் பெரியோர்.

ஆழ்வார்களோ மிக விசித்திரமானவர்கள். உண்மையில் அவர்கள் மறந்தும் புறந் தொழா மாந்தர்கள். ஆண்களாகிய ஆழ்வார்கள் பெண்ணுடை தரித்துப் பேசும் விதமே விநோதம். திருப்பாவை தந்த செல்வியின் செயலை ஆழ்வார்கள் செய்யப் புகுந்தனர். மடல் ஏறுவதாகிய பெண்ணின் செய்கையைத் தாம் மேற்கொள்ளப் போவதாகப் பயமுறுத்தினர் ஓர் ஆழ்வார்.

தமிழும் தனி மொழியே; வடமொழியும் தனி மொழியே, என்பர் இவ்விரு மொழிகளிலும் தேர்ந்த பெரியோர். ஆரியமும் தமிழும் ஒன்றையொன்று சந்திப்பதற்கு முன்னரே திருமால் வணக்கம் தமிழ் நாட்

டில் உண்டு. திருமால் தமிழரது தனித் தெய்வ மன்று. பிற நாடுகளிலும் திருமால் வணக்கம் உண்டு. ஆரியத்தில் தேர்ந்தவரும், தமிழில் தேர்ந்தவரும் சந்தித்த காலத்தில் இருவகையாரும் தங்களுக்குத் தெய்வம் ஒன்றே—திருமாலே—என்பதைக் கண்டுகொண்டனர். பின்னர்ப் பேசவும் வேண்டுமோ? ஒரே தெய்வத்தை வணங்கும் வெவ்வேறு மொழியாளர் கூடின் தெய்வ வணக்கத்திற்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் எல்லை யுண்டோ?

தமிழர், தமிழ் நாட்டிலேயே தங்கி இருக்கவேண்டு மென்ற எண்ணமுள்ளவரல்லர். வேறு நாடுகளையும் கண்டு மீள்வர். முற்காலத்திலும் அப்படியே; இக் காலத்திலும் அப்படியே. திரைகடலோடியும் திரவியம் தேடுவர் தமிழர். 'திரவியம்' என்பது செல்வம். பிற நாட்டாரது உயர்ந்த கலைச் செல்வத்தையும் தமிழ் நாட்டிற்குக் கொண்டு வராமலிருப்பரோ? ஒவ்வொரு நாடும் வெவ்வேறு கலையில் உயர்ந்து இருக்கலாமன்றோ? முற்காலத் தமிழர் பிறரது கலைச் செல்வங்களைக் கண்டு வெறுத்துத் தள்ளி யிருக்க முடியுமோ? ஒரே கடவுளை வணங்கும் இரு மொழியாளர்கள் ஒன்றுகூடி ஒற்றுமையாய் வாழ்ந்த காலத்தில் அவர்களுடைய கலைகள் மாத்திரம் தனித்தனியே வளருமோ? எனவே ஒரு கலையின் சிறப்பு மற்றொரு கலையை வளர்க்க உதவிய தென்க.

ஆரியம் வேண்டுமென்றே தமிழ் நாட்டில் புகுத்தப்பட்டது என்று கூறுவதாயிருந்தால் அது பொருந்துமா?

இந்தியாவில் தோன்றிய பௌத்த மதம் வெளி நாடுகளில் பரவி யில்லையா? இலங்கை, பர்மா, மலேயா கிழக்கிந்தியத் தீவுகள் தென்னுப்பிரிக்கா, மோரிசு, திருனிடாத் முதலிய வெளி நாடுகளில் தமிழர் குடியேறி இருக்கும்பொழுது, அந்நாடுகளில் தமிழரது கலாசாரம் பரவாமலே இருந்து விடுமா?

ஹிட்லரால், ஜெர்மனியிலிருந்து யூதர்கள் வெளி யேற்றப்பட்டனரே! அந்த யூதர்கள் யாது செய்தனர்? வேறு நாடுகளில் சென்று குடியேறி யுள்ளனரன்ருே? கலையில் சிறந்தவர், தாம் குடி புகுந்த நாட்டிற்குத் தம் கலையைக் கொடாது போவரோ? அன்றியும் அந்த யூதர்கள் தாம் குடி புகுந்த நாட்டாரோடு கலந்து அவரது மேன்மைக்குக் காரணமானவைகளைத் தேர்ந்தெடுத்து உபயோகியாது விடுவரோ? மிகச் சிறிய தொகையினராகிய யூதர், நாளடைவில் தாம் குடி புகுந்த நாட்டாரைப்போல் தாமும் ஆகி, அவர்களோடு கலந்து மறைந்து போவரன்ருே?

பல நாட்டார் இந்தியாவிற்கு முற்காலத்தில் வந்துள்ளனர். இந்தியாவின் செழிப்பே அதற்குக் காரணம். கிரேக்கர், சீனுக்காரர், பாரசீகர், அராபியர், யவனர் முதலிய பல நாட்டார் வந்துள்ளனர். பிற்காலத்தில் போர்த்துகேசியர், டச்சுக்காரர், பிரஞ்சு நாட்டார், ஆங்கிலேயர் முதலியவர்களும் வந்தனர்.

வாணிபம் செய்ய வந்தவர் சிலர்: நாடு பிடித்து ஆள வந்தவர் பலர்; நாட்டின் வளத்தைக் கண்டு குடியேறியவர் மிகப் பலர். அவ்வரவர் பேசிய மொழிகளிலிருந்து பற்பல வார்த்தைகள் இந்திய மொழிகளில் வந்து குடியேறி யுள்ளன. இம்மட்டோ? வேறு நாட்

டாரின் கதைகளும் காவியங்களும் இந்தியாவிற்குக் கிடைத்துள்ளன.

தமிழ் மொழியிலும் வளர்ச்சி தோன்றலாயிற்று. வடமொழியிலுள்ள பல நூல்கள் தமிழில் இயற்றப்பட்டன. பௌத்தரும் சமணரும் தமிழில் பல நூல்களை இயற்றி யுள்ளனர். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இயற்றிய மனோன்மணீயம் உயர்ந்த நூலல்லவா? அந் நூலில் வரும் குடிலன், பலதேவன், வாணி முதலிய பெயர்களும், மற்றும் கூறப்பட்டவை யாவும் தமிழ் நாட்டிற்குச் சொந்தம் என்று தோன்றுகின்றன அல்லவா? உண்மையில் ஆங்கில ஆசிரியர் ஒருவரால் எழுதப்பட்ட கதையையே, 'மனோன்மணீயம்' என்று தமிழில் நாடகமாக அவர் எழுதினார். கதை, தமிழ் மயமாகித் தோன்றுவது காணத்தக்கது!

இங்கிலையில் ஆரியமென்றும் மற்ருென்றென்றும் பிரித்துக் காண முடியுமா? தமிழோடு கலந்தவை தமிழ் மயமாகி மறைந்தன.

போக்கு வரவு சாதனங்கள் மிகுந்துள்ள இக்காலத்துக் கலைக் கலப்பை யாரே தடுக்க வல்லார்? அன்றிக் கலந்தவைகளை யாரே பிரிக்க வல்லார்?

கம்ப ராமாயணம் ஓர் உயர்ந்த நூல். தமிழரது செல்வம். அதில் ஆங்காங்குத் தேய்ந்து போனவும், தேயப் போவனவும் ஆன இடங்கள் இருக்கலாம். அவை நந்தனவனத்திலுள்ள வாடிப்போனவும், வாடப் போவனவுமான ஒன்றிரண்டு செடிகள் போலாம்.

"கம்ப ராமாயணத்தில் காம ரசம் வருவதேன்?" என்பது கேள்வி. கம்ப ரசமே காம ரசந்தானு? வேறு

ரசம் உண்டோ? அறிஞர் அண்ணாத்துரையின் 'கம்ப ரசம்' என்ற நூலைப் படித்தவர்களும் மற்றவர்களும் இந்நூலைப் படித்து விடை தருதல் வேண்டும்.

தமிழ் நாட்டில் திருமால் வணக்கம் எக்காலத்தில் தோன்றியது என்று கூற முடியாதபடி அவ்வளவு பழமை வாய்ந்தது. இலக்கியம், சித்திரம், சிற்பம் ஆகியவை சில காலங்களிலேயே ஓங்கி வளரும். கம்பர் காலத்தில் மாந்தர் பற்பல துறைகளிலும் சிறந்து விளங்கினர். கம்பர் தமது நூலால் நாட்டின் இலக்கிய வளர்ச்சியைப் பெருக்கினர். அவர் கால மக்கள் பற்பல கலைகளில் தேர்ந்து, உண்மையானவைகளைப் போற்றி, புலவர் பெருமக்களை ஆதரித்ததே கலை வளர்ச்சிக்குக் காரணம்.

---

## போது II

## கம்ப ராமாயணம்

கம்பர் தீட்டிய ஓவியத் திரை விசாலமானது. ஆழ்ந்த அகன்ற கொள்கைகளைப் பெற்றது. பற்பல பகுதிகளையும் கோவையாய்ச் சேர்த்து 'ஒரே அமைப்பு' என்று கூறும்படி கம்பர் பாடியது மகிழத்தக்கது. அவருடைய கவிச் சித்திரங்கள் எக்காலத்திலும் எழில் உடையனவாகத் தோன்றும். பற்பல பாகங்களும் அழகாய் இணைக்கப்பட்டு விளங்கும்.

கம்பர் கவிகள், சொல் நயம் பொருள் நயம் வாய்க்கப் பெற்றுப் படிப்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும். அவருடைய உவமானங்கள் ஒப்பில்

லாதவை. கம்பர் வால்மீகியிடமிருந்து பெற்றவைகளை அப்படியே எடுத்தாள மாட்டார். ஒவ்வொன்றையும் எடை போட்டுப் பார்த்துத் துலக்கிப் பொறுக்கி யெடுத்தே உபயோகிப்பார். அப்படிச் செய்வதில் வால்மீகியின் கைகளில் பிரகாசித்தவை, கம்பரின் கைகளில்—புது ஒளி—புதுச்சக்தி—பெற்று விளங்கும்.

வால்மீகி கூறுபவைகளில் சிலவற்றை விலக்கியும், சிலவற்றை மாற்றியும், தமது யுக்தியால் சிலவற்றை உற்பத்தி செய்தும், தமிழ் மொழிக்கும், தமிழருக்கும் ஒத்த முறையில் கவி பாடுவது அவரது சிறப்பு. வால்மீகியின் தந்திரங்களைக் கம்பர் கையாண்டாலும், அவைகளைத் தமிழ் மயமாகச் செய்வதில் கம்பர் பெரு நோக்குடையவர். வால்மீகியின் நவரத்தினங்களைப் பட்டை தீர்த்துத் தமது இராமாயணத்தில் பதித்தது அவரது ஒப்பற்ற திறனைக் காட்டும்.

காவிய அமைப்பு எப்படி இருத்தல் வேண்டுமென் பதைப் பற்றிப் பற்பல ஆராய்ச்சிகள் உண்டு. நந்தன வனத்தை அமைப்பது போன்றது காவியம். அங்கே பலவிதச் செடிகளும் இருத்தல் வேண்டும். கண்ணைக் கவரும் மலர்கள், மணம் தரும் மலர்கள், ஒளி வீசும் இலைகள், நிமிர்ந்து நிற்கும் செடிகள், வளைந்தாடும் செடிகள், படரும் கொடிகள் தடாகங்கள், அவைக ளில் பூ நிறைந்த கொடிகள்—யாவும் நந்தனவனத்தின் சிறப்பு. அவையவை இருக்கவேண்டிய இடத்தில் இருத்தல் வேண்டும்.

இமயமலையைப் பாருங்கள். அது உயர்ந்துள்ளது. அழகிய சிகரங்களை யுடையது. அதன் பனி மூடிய சிக

ரங்கள், சூரிய ஒளியில் அடிக்கடி மாறும் பற்பல வருணத் தோற்றங்கள், பலவித மரங்கள், உயர்ந்த மரங்கள். ஒளி விசி, மணங் கமழும் மலர்கள். மரங்களைச் சுற்றி ஏறிப் படரும் கொடிகள்—மலர்களைத் தாங்கிய கொடிகள். இலைகளைத் தாங்கிய கிளைகள்: பலவித இலைகள். சலசலவென வோடிப் பாறைகளைத் தாண்டும் சிற்ருறுகள். பலநிறப் பட்சிகள்; அவைகளின் கானங்கள்; அங்கு மிங்கும் நடமாடும் மிருகங்கள்; பச்சைப் பசேர் என்றிருக்கும் கண் கொள்ளாக் காட்சிகள்; இவை யாவும் கவியின் காவியம்.

ஒரு மாளிகை; அதன் வெளித் தோற்றம்; உள் நுழைந்தால் முக்கிய இடம்; இணைந்து நிற்கும் பற்பல பிரிவுகள்; அவைகளைத் தாங்கி நிற்கும் சுவர்கள்; தூண்கள்; காற்றுலாவ வசதி; கதிரவன் ஒளி உள்ளே நுழைய வழி; யாவும் அமைப்பவனின் அகக்கண்ணிற் ருேன்றிச் சமைக்கப்படுவன அல்லவா? காவியமும் அங்ஙனமே.

பல அவயவங்களையுடைய உயிரோடு கூடிய உடல் ஒரே பிராணியாய் இருப்பதுபோல் காவியத்திலும் அந்த 'ஒருமை' வேண்டும் என்பர் பெரியோர். தொடக்கம், இடை முடிவு ஆகியவை காவியத்தில் தலை, 'உடல்', கைகால்கள் போல் பற்பல உறுப்புக்களை யுடையன வாயினும் ஒன்று என்ற உணர்ச்சி தோன்ற விளங்க வேண்டும். இடையே வரும் கதைகள், வருணனைகள், யாவும் காவிய வளர்ச்சிக்கு உதவி புரிந்து வருதல் வேண்டும். காவியத் தலைவர்களை மறைக்கும் வகையில் அவைகள் அமைதல் கூடா. காவியம் கம்பீரமாய் ஒளி வீச ஆங்காங்கே உவமானங்கள் எடுத்தாளப்பட வேண்டும். படிப்பவரது உணர்ச்சியைப் பெருக்கி மனத்தைக்

கவர்ந்து, மேலும் மேலும் படிக்கத் தூண்டும் நிகழ்ச்சிகளே காவியப் பெருமையைக் காட்டும் உரைகல்.

கவி எழுதப் புகுந்த காவியத்தின் பெருமையைத் தாங்கி நிற்பது மொழி. கம்பரது இராமாயணத்தைச் சிறப்பாய் எழுத அவருக்குத் தமிழ் மொழி இடமளித்தது. சிந்தாமணி முதலிய நூல்களில் வரும் கற்பனைகளைக் கம்பர் எடுத்தாண்டிருப்பதைக் காணலாம். திருக்குறள் ஆங்காங்கே கம்ப ராமாயணத்தில் ஒலிப்பதை யறிவது அரிதன்று. அவரது மனத்திற் றோன்றிய ஓவியங்களைத் தமிழ் மொழியில் தீட்டுவதற்கு அம்மொழி இடமளித்தது. தமிழின் வளம், கம்ப ராமாயணத்தின் மேன்மைக்குக் காரணமென்று கூறுவது மிகையாகாது.

---

## கம்ப ரசம்

### முதல் டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### அல்குல் என்பது யாது?

"ஸ்ரீமத் இராமாயணத்திலே இலயிக்காதவர் மனிதராவரோ! கேவலம் மரக்கட்டை யன்றோ! என்று புராணிகர்கள் கூறிடக் கேட்டதுண்டு. ஆனல் உண்மையில் அவர்கள் எதைக் கண்டு இலயிக்கிறார்கள் என்பது தெரியாது திகைத்தேன். அந்தத் திகைப்புப் போய்விட்டது கம்ப ரசத்தைக் கண்டு பிடித்ததும்" என்கிருர் கம்பரச ஆசிரியர்.

புராணிகர்கள் காம ரசத்தைப்பற்றிப் பேசியிருக்கமாட்டார்கள். அப்படி யிருந்தும் திகைப்பு ஏற்படக்

காரணம் என்ன? 'இராமன் வடநாட்டு வீரன். ஆரிய மாயையைத் தென்னுட்டில் பரப்பியவன். ஆரியச் சம்பந்தமே கூடாது' என்ற எண்ணத்தோடு இராமாயணத்தைக் கேட்டால் 'திகைப்பு' ஏற்படாது வேறு என் செய்யும்! 'காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையார் கண்ணதே' என்பர் புலவர்.

'கம்ப ரசம்' எழுதிய ஆசிரியர் கண்டது காமரசமன்ருே? காமத்திற்குக் கண்ணில்லே யாகையால், 'தேவரசம் இராமரசம்' எல்லாம் கள்ளினுங் கொடிய காம ரசமாகி, கம்ப ரச ஆசிரியர் வேறு ரசங்களேக் காண முடியாதபடி அவரது கண்களே மறைத்து விட்டன போலும்!

கம்பர் நாடகக் கவி. அவர் காலத்திற்கு எத்தனேயோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயே இராமாயணம் தமிழ் நாட்டில் உண்டு. 2000 வருடங்களுக்கு முன் தோன்றிய சிலப்பதிகார காலத்திற்கு முன்னேயே 'தொல்லிலங்கைக் கட்டழித்த சேவகன் சீர்' பரவியிருந்தது. திருமாலின் அவதாரங்களேத் தமிழர் போற்றத் தொடங்கியது எக்காலத்தில் என்பதை உறுதியாய்க் கூற முடியாது. மிகப் பழைய நூலாகிய தொல்காப்பியத்தில் 'மாயோன் மேய காடுறை உலகம்' என வருவதால், திருமால் வழிபாடு தமிழகத்தில் எக்காலத்திலும் உண்டு என்று கூறுதல் மிகையாகாது. எனவே மக்கள் உள்ளத்தில் குடி கொண்டிருந்த இராமனது கதையைக் கம்பர் காவியமாகச் செய்தார்.

அவர், வடமொழி இராமாயணத்தைப் பெரும்பாலும் பின்பற்றினுர். ஆழ்ந்த பொருள்களேயுடைய

சொற்களை யமைத்து எழுதினர். காவிய இலக்கணத்தைக் கைவிடாமல் ஆங்காங்கே சிருங்கார ரசத்தை அமைத்துக்கொண்டார். அறிஞர் அவைகளைப் படிக்கும்பொழுது ஒருவாறு அறிந்துகொண்டு, அவைகளைப் பற்றி ஆழ்ந்த சிந்தனையில் இறங்காது 'கவியின் மரபு' என்று மேலே செல்வது வழக்கம். கம்பனின் கவித்திறனை எடுத்துப் பேசப் புகும் பெரியோர்களும் சிருங்கார ரசத்தை மிகுதியாய் எடுத்துரையாது செல்வர். இரசிக மணிகளாகிய சிதம்பரநாதர்; பி. ஸ்ரீ; சேதுப் பிள்ளை முதலாய புலவர் பெருமக்களும் அவ்விதமே செய்திருப்பர். அதை யறியாது, "அப்புலவர் பெருமக்கள் எனக்குச் சூட்சுமத்தை விளக்கிடவில்லை" என்று கூறுதல் பொருந்துமா?

"இராமன் வீர உரையைக் கம்பன் தீட்டிடுவது பார்! இயற்கையின் எழிலை அப்படியே எடுத்துக் காட்டும் திறத்தைக் கவனி! உவமைகள் தரும் உல்லாசத்தை உணரு; என்று கூறி வந்தார்களே தவிர உண்மைக் கம்ப ரசம் இதுவென்று கூறியதில்லை" என்று வருந்துகிருர் கம்பரச ஆசிரியர். ஐயோ பாவம்! அப்புலவர்கள் கம்ப ரசத்தைக் காம ரசமாய்ப் புரிந்து கொண்டிருந்தா லன்றோ அவ்விதம் செய்திருப்பர்!!!

'அயோத்தி மக்களைப் போன்ற அயோக்கியர்கள், அநாகரிக புத்தியும் போக்கும் கொண்டவர்கள்,—காமாந்தகாரக் காட்டு மிராண்டிகள்—வேறு எங்கும் இல்லை' யென்பது அறிஞர் அண்ணுத்துரையின் ஆழ்ந்த ஆராய்ச்சியின் முடிவு. கம்ப ராமாயணம் அயோத்தியா காண்டம் குகப்படலம் 56-வது செய்யுளை எடுத்துக் கொள்கிருர். 'இயல்வுறு' என வரும் செய்யுளில்

காணப்படும் 'அல்குல்' என்பதற்குப் பெண்குறி என்று பொருள் கொண்டு அல்லல் படுகிறார்.

"மிக வேகமாய்ச் செல்லும் பெரிய படகுகளின் இரு பக்கத்திலும் வேடர் துடுப்புக்கொண்டு நீரைத் தள்ள, நீர்த் திவலை மேலெழும்பி, ஓரிடத்திலேறிய மாதரின் மெல்லிய ஆடையை நனைத்ததால், அவ் வாடைக்குள்ளே மறைந்து கிடந்த பெரிய அல்குலின் ஒளி வெளியே தெரியலாயிற்று. படகுகளிலே இருந்த வீரர்களின் மனச்சோர்வு, அந்தக் காட்சியைக் கண்ட தால் நீங்கிற்று," என்பதே அப்பாட்டிற்கு அவர் தரும் பொழிப்புரை.

'அல்குல்' என்பது 'பெண்குறி' ஒன்றே என்று சிலர் தவருக எண்ணி இடர்ப்படுகின்றனர். அவர்க ளுள் அறிஞர் அண்ணுத்துரையும் ஒருவர். உண்மை யில், அல்குல் கொப்பூழிற்குக் கீழேயுள்ள அகன்ற அடி வயிற்றையும் குறிக்கும். வடமொழியில் 'ஜகனம்' என்பர். நனைந்த நீர்த் திவலைகள் அடிவயிற்றைக் காணும்படி செய்தன. ஒவ்வொரு வீரனும் தன் மனைவி யின் அடி வயிற்றின் அழகைக் கண்டு மனச்சோர்வு நீங்கினுன் என்பதே பொருள். பெண்குறியாயின் எங் ஙனம் ஒளி வீசும்? தொடைகளின் மேல் பாகங்களின் இடையே மறைந்து கிடப்பதால் காண முடியாதென்க. பட்டாடை நனைந்தால் மறைவிடம் வெளித் தெரிந்து விடாது. பெண்குறி குறுகி யிருப்பது. 'பரவை அல் குல்' என்பதனுலேயே, கம்பர் பெண்குறியைக் குறிக்க வில்லை யென்பது அறியத்தக்கது.

காடு சென்ற இராமனை அழைத்து வரச் சென்ற வீரர் கண்டது ஒன்று. அவர் மறைவிடத்தைக் கண்ட

தாகக் கொண்டார் கம்பரச ஆசிரியர். இதனுல் வந்த அனர்த்தமே அவரது முதல் டோஸ். அந்தோ! அந்த டோஸ் என்ன செய்துவிட்டது. தெரியுமா? அவர் காமாந்தகாரர்களின் கதையைப் புண்ணிய சரிதம் என்று மக்கள் படிக்கின்றனரே என்று சோகிக்கிருர். 'பகவான்' பிறந்த இடத்திலே வாழ்ந்த மக்கள் இவ்வளவு அநாகரிக முடையவர்களாக இருந்தார்களே என்பதை எண்ணித் துக்கிக்கிருர். கவி செய்ததை எண்ணிக் கவலே கொள்கிருர்! திரு அவதாரக் கதைக்கு இச் செய்யுள் தேவையா என்று கேட்கிருர். மாருன பொருளேக் கொண்டால் தீராத மயக்கம் தோன்றுவது இயற்கையே! அவர் உண்மைப் பொருளே உணர்வாரேயானுல் அவரது மயக்கம் தெளியும்.

பரிபாடல் 13-ஆம் பாட்டில் திருமாலேப்பற்றிக் கூறும்போது, 'மார்பும் அல்குலும் மனத்தோடு போயை' என வருவது காண்க.

இங்கு 'அல்குல்' என்பதற்குப் 'பின்புறம்' என்று பெரியோர் பொருள் கூறுவர். எனவே, 'அல்குல்' ஆண்களுக்கும் உண்டென்ருல் நாம் அறிவது யாது?

இன்னும் பாருங்கள், இராமன் கான்புக, தசரதன்

'பூ மருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து
பூந்துகில் சேர் அல்குல்
காமரேழில் விழவுடுத்துக் கலனணியாது
அங்கங்கள் அழகு மாறி
ஏமருதோளேன் புதல்வன் யான் இன்று
செலத்தக்க வனம்தான் சேர்தல்
............இது தகவோ?..........

என்ருன் என்று பாடினுர். யார்? கம்பரல்லர்!

'கோல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக்கோன்குல சேகரன்'

என்று தன்னைக் கூறிக்கொள்ளும் திருவஞ்சிக் களத்துப் பெருமாள்.

'பெருமாளா?'

'ஆம். பெருமாள் திருமொழி பாடிய குலசேகர ஆழ்வார். அவர் ஊர் கள்ளிக்கோட்டை, அவர் தமிழை நன்கறிந்து திருமாலது திரு அவதாரமாகிய இராமனது பூந்துகில் சேர் அல்குலைப் பற்றிப் பேசுகிருரென்ருல், 'அல்குல்' என்பது யாது என்று நாம் பேசவும் வேண்டுமோ?

---

## இரண்டாம் டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### பாரத்துவாசர் மாசற்றவரே.

"அயோத்தி நாட்டு மதுகை மைந்தர்கள் மது மைந்தர்களைவிடக் கேவலமானவர்; ஒரு காலத்தில் சோமரசம் குடித்துக் கூத்தாடிக் கிடந்தவர் ஆரியர்' என்கிருர் அறிஞர் அண்ணுத்துரை.

சோம பானங்கள் போன்ற வேறு பானங்கள் தமிழ் நாட்டில் இருந்ததில்லையா?

இருந்தன என்பதற்கு

'துணைப் புணர்ந்த மடமங்கையர்
பட்டு நீக்கித் துகிலுடுத்து
மட்டு நீக்கி மது மகிழ்ந்து'—பட்டினப்பாலை 106-108

'சிறியகள் பெறினே எமக்கீயுமன்னே
பெரியகள் பெறினே யாம் பாடத்தான்,
மகிழ்ந்துண்ணும்' —'புறநானூறு—235.

'மட்டு உண் வாழ்க்கை வேண்டுதிர் ஆயின்'
—சிலப்பதிகாரம், வேட்டுவ வரி.

'நறவு மலி பாக்கத்துக்
குறமகளீன்ற' —குறுந்தொகை: 394.

இவைகளே சான்று; மேலும் வேண்டுமோ? திருவள்ளுவர் ஏன் கள்ளுண்ணுமையைப் பற்றிப் பேசினுர்?

காங்கிரஸ் ஆட்சி தோன்றிய பிறகு இந்தியாவில், சென்னை மாகாணத்திலே பூரண மதுவிலக்குத் தோன்றியுள்ளது. மற்ற மாகாணங்களிலும் மதுவிலக்குப் பரவினுல் மக்களின் மகிழ்ச்சி வளரும் என்று கூறவும் வேண்டுமோ?

'மதுகை மைந்தர், மதுகை மைந்தர்' என்று அடிக்கடி அறிஞர் அண்ணுத்துரை அயோத்தி வீரர்களைக் குறிக்கக் கூறுகிறுர். மதுகை மைந்தர் மது மைந்தர்களே என்பது அவரது முடிவு.

மது கை மைந்தர்

மது = (மதுவாகிய) கள்ளை

கை = கையில் தாங்கிய

மைந்தர் = (அயோத்தி) வீரர்

'கள்ளைக் கையில் ஏந்திய அயோத்தி வீரர்கள்' என்று கூறுவதுபோல் அடிக்கடி தமது 'கம்பரசம்' என்ற நூலில் கூறுகிறுர் அறிஞர் அண்ணுத்துரை.

மதுகை = (வலிமையால் வரும்) வெற்றி

மதுகை மைந்தர் என்றுல் வெற்றி வீரர் என்பதே பொருள்.

பரமனருள் பெற்றுப் பந்தபாசம் விட்டு நாலு வேதம் கற்றுணர்ந்த பாரத்துவாசமா முனிவர் ஒரு விபசார விடுதிக்குத் தலைவராய் விளங்கினர் என்பது அறிஞர் அண்ணாத்துரையின் இரண்டாவது டோஸ். கம்பரது அயோத்தியா காண்டம் திருவடி சூட்டு படலத்தில் 'அஞ்சடுத்தவமளி' என வரும் செய்யுளிலிருந்து இரண்டாவது டோஸ் தயாரிக்கிருர். முதலில், செய்யுளில் நாம் காண்பது "பஞ்சணையின் சிறப்பு; பிறகு பாவையரின் வருணனை. பின்னர் ஆடவரும் பெண்டிரும் உறங்கும் காட்சி." அவ்வளவே ; கம்பரச ஆசிரியர் எங்ஙனம் கொடிய நஞ்சினைக் கலக்குகிருர் தெரியுமா? நவ்வியின் துஞ்ச='பெண் மான்கள் போலே படுத்து உறங்க' என்று பொருள் கொள்ள வேண்டியிருக்க 'படுத்து' என்பதற்கு முன்னுல் 'அருகில்' என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொள்கிருர். இதன் விளைவு என்னுயிற்றுப் பார்த்தீர்களா? அணங்குகள் ஆடவர் 'அருகில்' படுத்து என்று பொருள் கொண்டு காமரசம் சேகரிக்கப் படுகிறது. இப்படிக் குதர்க்கமே காமரச 'டோஸா'க்கப்பட்டு 'பருகுங்களையா பருகுங்கள்' என்று கொடுக்கப்படுகிறது.

பகுத்தறிவுள்ள மாந்தர் எக்காலத்திலும் உலகத்தில் உண்டு. நல்லவர் சிலராவது இல்லாத நாடும் உண்டோ? எக்காலத்திலும் நேர்மையான குணுளர்கள் இருப்பர். பாரத்துவாச முனிவர் விபசார விடுதிச்சாலை மூலம் தொண்டாற்றி வந்தாரென்ருல் அக்காலத்துக் குணசாலிகள் கூடி அவரைக் கிழித்துக் கொல்லாமல் விட்டிருப்பரா? நேர்மை என்பது இக் காலத்தவருக்குத்தான் உரிமையோ?

இன்னும் கம்பரச ஆசிரியர் கூறுவதைக் கேளுங்கள்.

கல்கத்தாவிலே சில வீதிகளில், விபசாரிகள் வசிக்க அவர்களிடம் பட்டாளத்துக்காரர் விபசார வசதி பெற்றதாக ஓர் புகார் வெளிவந்த காலத்து நற்குணசாலிகள் பலர் ஒன்றுகூடிக் குற்றம் களைந்தனர் என்கிருர். இது இக்காலத்தில் நிகழ்ந்த செய்தி. முற்காலத்திலும் பாரத்துவாசர் விபசாரவிடுதி நடத்திக் காட்டியிருந்தால்! அங்ஙனமே நிகழ்ந்திருக்கும்.

பாரத்துவாசரது ஆசிரமத்தில் தோன்றிய மாதர், விருந்தினரை உபசரித்ததில் வேந்தரென்றும் வேலையாள் என்றும் பாராது எல்லோரையுமே உபசரித்தனர் என்பதைக் கம்பர், 'வேந்தராதி சிவிகையின் வீங்குதோள் மாந்தர் காறும்' எனக்கூறி விளங்க வைத்தார். வேந்தரின் பணியாட்கள் எப்பொழுதும் பணியாற்ற ஏற்பட்டவராயினும் பாரத்துவாசரது ஆசிரமத்தில் பணிசெய்ய ஏவப்படாது அவரவரது தகுதிக்குத்! தக்கபடி விருந்தோம்பப்பட்டனர் என்பதே!கம்பரது கூற்று.

அறிஞர் அண்ணுத்துரையின் மயக்கத்தைப் பாருங்கள். புண்ணியம் செய்த தேவமாதர் இப்படியும் விபசார விடுதி நடத்தலாமா? ஒரு முனிவரது விருந்தின் வைபவம் இவ்விதந்தானு? ரிஷிக்குத்தான் இது! நியாயமா? என்பன போன்ற பல கேள்விகளை அடுக்கிக் கொண்டே போகிருர்.

களைத்து வந்த! மதுகை மைந்தர் விருந்தளிக்கப் பெற்றனர். 'உண்ட மயக்கம் தொண்டருக்கும் உண்டு' ஆகையால் அவர்கள் களைப்பு நீங்கத் தூங்கி

னர். விருந்தோம்பிய மாதரும் தங்கள் களைப்பு நீங்கும்படி உறங்கினர். இவைகளே நாம் அறியக் கிடப்பன. வலிந்து பொருள்கொண்டு, இடித்துக் கூறப் புகுவது கேட்போரையும் படிப்போரையும் சலிக்கச் செய்யாதோ?

---

## மூன்ருவது டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### இராமனின் கலங்கிய நிலை.

காளை காணுமற் போனதால் கலங்கிய கண்ணன் கதையை, மனத்தால் நினைத்து, வாயால் துதித்து, மையில் தோய்த்து கையால் எழுதிக் கடுதாசியில் அச்சடித்துள்ளார் கம்பரச ஆசிரியராகிய அறிஞர் அண்ணுத்துரை, தமது மூன்ருவது டோஸில். கோகுலத்தில் அடிக்கடி காணுமற்போன காளையாகிய கண்ணன் இல்லை; இவன் வேறு கண்ணன்! வேலனின் நண்பன். காளையைப் போக்கடித்த கண்ணனையா, கண்ணன்! அறிஞர் அண்ணுத்துரை என்ன எண்ணுகிருர் தெரியுமா?

'மாடு கெட்டதுடன் மதியும் கெட்டுவிட்டது போலும்' என்று வேலன் எண்ணுவான் என்று எண்ணுகிருர். 'எது கேட்டுவிட்டதென்று?' மதியும் கெட்டு விட்டதென்று. எப்பொழுது? கண்ணனுடைத்த காளை கெட்டு விட்ட காலத்து.

'சக்தியிருந்தால் செய்; இல்லையேல் சிவனே என்று கிட' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. சக்தியாகிய பார்வதியின் அருள் இருந்தால் சிவனுக்கு வலிமையுண்டு. பார்வதியை விட்டுப்பிரிந்தால் சிவனும் வலிமை

யற்றுச் செயலற்றுக் கிடப்பதுபோல் இருக்கவேண்டும் என்பது பொருள்.

“காளையைத் தொலைத்த கண்ணன் கதைக்கும் சக்தியற்ற சிவனுக்கும் என்ன சம்பந்தம்?”

“பொறுங்கள்! மகாத்மா காந்தி போற்றும் பொறுமையைக் கையாளுங்கள்!!”

மாட்டைத் தொலைத்து மதியையும் தொலைத்துக் கொண்டானல்லவா அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணன். சக்தியைத் தொலைத்துத் தன் வலிமையைத் தொலைத்துக் கொள்கிருனல்லவா சிவன்.

‘சிவனு! ஆரியர் கொண்டுவந்த தெய்வமல்லவோ சிவன்?’

‘அது அறிஞர் அண்ணுத்துரைக்கு—கம்பராமாயணம் படிப்பவர்களுக்கு அன்று.’

“என்ன ஐயா, புதிர் போடுகின்றீர்களே!”

ஆம். புதிராகத்தான் இருக்கும். அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணன், காளையை இழந்தபடியால் மதியை இழந்தான். காளைக்குக் கொம்பு உண்டு அல்லவா! கம்பரது இராமன் கொம்பை இழந்தபடியால், மதியை இழந்தான்.

‘புரிகிறதா?’

‘ஐயோ, தெய்வமே! புரிகிறதாவது?’

‘இதோ பாரும்.’

“சென்னிமலை வேலவருக்குச்
சேர்ந்த கொம்பு இரண்டு உண்டு.”

'அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணனது வேலனு? சென்னிமலையின் வேலனு?'

'சென்னிமலையின் வேலனே.'

'வேலனுக்கு இரண்டு கொம்புகளா உண்டு?'

'ஆம், சென்னிமலை வேலனுகிய முருகனுக்குப் பூங்கொம்பு போன்றவர்களாகிய வள்ளி, தெய்வயானை என்ற இருமனைவியர் உளர்.'

'அதனுலென்ன?'

'ஒன்றுமில்லை.'

'கம்பரது இராமன், கொம்பை இழந்து, மதியை இழந்தானென்று கூறினீர்களே!'

'ஆம். இராமன் பூங்கொப்பு போன்ற சீதாபிராட்டியை இழந்து மதியையும் இழந்தான்.'

"கண்ணன்தான் மதியை இழந்தான். இராமனுமா மதியை இழந்தான்?"

"ஆம், அறிஞர் அண்ணுத்துரை, கம்பர் போன்ற ஒரு பெரிய மேதாவி. எனவே, அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணன் மதியை இழந்தால், கம்பரது இராமன் மதியை இழக்க வேண்டாமா?"

அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணன் காளையைப் பறி கொடுத்ததால், மதியைப் பறிகொடுத்தான்; கம்பரது இராமன் கேவலம் காளையின் ஒரு பாகமாகிய கொம்பைப் பறிகொடுத்து மதியையும் இழந்தான். என்ன நினைக்கிறீர்கள்? காளை விலைபெற்றது. கொப்பு

அப்படியாகுமோ? ஆகையால் அறிஞர் அண்ணுத் துரையின் கற்பனைக்கு முன்னுல் கம்பர்து கற்பனை யாது செய்யும்?

கம்ப மதத்துக் களியானைக் காவற் சனகன் பெற் றெடுத்த கொம்பை இழந்த இராமன் மதியை இழந்தா னென்று கூறினேமல்லவா? சீதையை யிழந்த இராமன் சக்தியைப் பிரிந்த சிவன்போல் ஆனுன். ஏன்? அறிஞர் அண்ணுத்துரை எண்ணுவதுபோல் பித்தன் ஆனுன். மனைவியை இழந்த துயரர் தாங்காது உளறத் தொடங் கினுன்.

இவ்விடத்தில் நாம் அரும் பெரும் கம்பசூத்திரத் தைக் காண்கிறேப். பரம பாகவதனுன இலக்குவனை இழித்துக் கூறி பாகவதாபசாரத்தைச் செய்த சீதைக் குச் சிறைவாசம் கிடைத்தது. தான் எடுத்துக்கொண்ட மானிட வேடத்திற்குத் தகுந்தாற்போல் இராமன் சீதை யின் பிரிவை ஆற்ருது புலம்பத் தொடங்கினுன். சொல்லின் செல்வனுகிய அனுமனைத் தூது அனுப்பி னுன். மற்ற வானரங்களையும் தூது அனுப்பினுன். ஆயினும் அனுமனது ஆற்றல் அறிந்து சீதையைப்பற்றி உளறத் தொடங்கினுன். சீதையை வருணித்துப் பற் பல கூறினுன். அவளது அடிவயிற்றைப் பற்றியும் கொங்கைகளைப் பற்றியுங்கூட அடையாளங் கூறினுன். ஓவியத்தெழுத ஒண்ணு உருவம் தாங்கிய இராமன், சனகன் பெற்ற அன்னமாகிய தேவியைப் பிரிந்தபின்னர் திகைத்தனன். அதனுல் வந்த விபரீதமே சிறையிருந்த செல்வியாகிய சீதையின் அவயவங்களைப் பற்றி அனும னிடம் பேசச் செய்தது.

'கம்ப சூத்திரம்' என்று கூறினீர்களே. அஃது எங்கு உள்ளது?"

இராமன் மனம் போனபடி சீதையின் அவயவங்களை அனுமனிடம் கூறியது தவறுதானே, குரங்கினிடம் கோமளவல்லிகளின் ஆடைக்குள்ளிருக்கும் அங்கங்களைப் பற்றிக் கூறுவதற்கு வெட்கமில்லையா? ஆபாசம் அன்ருே? அவளது கொங்கையை இராமன் செப்புக் கலசம் என்றும் செவ்விளநீர் என்றுமா கூறுவது? பக்தனிடமும் பாகவதனிடமுமா இவ்விதம் பேசுவது என்கிருர் அறிஞர்.

"மனைவியை இழந்து, மதியிழந்தவன் பேச்சையா அது. அவனது கலங்கிய நிலை." வேறு யாரிடமும் அவ்விதம் பேசாது, அனுமனிடம் பேசினுனே, அதைப் பற்றி ஆராய்வோம். தமிழ் நாட்டில், 'சுண்ணும்பில் இருக்கிறது சூட்சுமம்' என்று ஒரு பழமொழி உண்டு. அதன் பொருள் யாது?

'அண்ணலும் நோக்கினுன், அவளும் நோக்கினுள்' என்று தமிழர் கொள்கைப்படி கம்பர் தமது காவியத் தலைவர்களுக்கு மணம் ஆகும் வரலாறு கூறினுரன்ருே? வேறு ஒருவித மணமும் உண்டு. பிள்ளை வீட்டார் பெண் வீட்டாரிடம் சென்று மணத்தைப் பற்றிப் பேசுவர். பெண் வீட்டிற்குச் செல்லும் பிள்ளை வீட்டாரில் சில ஆடவர், கையில் வெற்றிலை பாக்கோடு சென்று அமர்வர். அவர்கள் பெண்ணை முன்னதாகப் பார்த்தறியாதவர். பெண்ணைப் பார்க்க முடியாதபடி அப் பெண் நாணிக்கோணிப் பதுங்கிக் கொள்வாளன்ருே? தம் வீட்டுப் பிள்ளைக்கு மணம் பேச வந்தவர், பெண்ணின் நிறத்தைக் காணவேண்டுமன்ருே? எனவே, வந்தவ

ரில் முதிர்ந்த வயதுடைய ஒருவர் பெண்ணின் தந்தையை நோக்கித் தம் கையிலுள்ள வெற்றிலையைக் காட்டி 'உங்கள் பெண்ணைச் சுண்ணும்பு கொண்டுவரச் சொல்லுங்கள்' என்பார். உடனே பெண்ணும் சுண்ணும்பு கொண்டுபோய் ஒரு வெற்றிலையின்மேல் வைப்பாளன்ரு? அப்பொழுது அம்முதியவர் அப்பெண்ணை நோக்கி, 'குழந்தாய், கிளிஞ்சற் சுண்ணும்பா, கற்சுண்ணும்பா?' என்று வினவுவார். உடனே அப்பெண்ணும் தனது இயற்கைக் குரலில் பதிலிறுத்து மீள்வள். இங்கேதானையா சூட்சுமம் இருக்கிறது!

பெண் கொண்டுவந்த சுண்ணும்பின் அளவைக் கொண்டு அவள் சிக்கன வாழ்வை நடத்துபவளா என்பதை அறிந்து கொள்வர். அவள் நடக்கும் விதத்திலிருந்து, அவளது அடக்கமுடைமையை அறிந்து கொள்வர். சில பெண்கள் 'டக்கு, புக்கு' என்று நடப்பதை நாம் பார்க்கிருேமல்லவா? மேலும் பெண்ணின் நிறம், பருமன், குரல் ஆகியவைகளையும் காண வழி ஏற்படுகிறது. இவைகளையெல்லாம் மனத்தில் கொண்டே பெரியோர் 'சுண்ணும்பில் இருக்கிறது சூட்சுமம்' என்றனர்.

* * *

கம்பனின் சூட்சுமத்தைப் பார்க்க வாருங்கள். அறிஞர் அண்ணுத்துரை கூறுவதுபோல், இராமன் மங்கையின் கொங்கையைப் பற்றியுமா அனுமனிடம் பேசுவது! ஆம், அனுமன் இராமனின் ஒப்பற்ற பக்தன். இராமனுக்கேற்ற பக்தன், ஐயா!

எங்ஙனம்?

சீதையின் அவயவங்களையெல்லாம் இராமன் சொல்லக் கேட்டானல்லவா? அவைகளை அனுமன் மனத்

தில் வாங்கிக்கொண்டதாகவே தெரியவில்லை. ஏன் தெரியுமா? இங்கேதான் கம்பர் அறிஞர் அண்ணாத்துரையை ஏமாற்றுவதற்காகத் தம் கைவரிசையைக் காட்டுகின்றார். இராமன் கூறிய சீதையின் அடையாளங்களில் ஒன்றையும் உபயோகியாது அனுமன் இலங்கையில் சீதையைச் சீதை யென்றறிந்தான்.

'உண்மையாகவா?'

'ஏன்! நீங்களே பார்க்கலாம்.'

கம்பராமாயணம், சுந்தரகாண்டம், திருவடி தொழுத படலம் 62-வது செய்யுளைக் கண்டுபிடியுங்கள். முதலடியில் கம்பர் என்ன கூறுகிறார்? அனுமன்,

'கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்' என்றான் என்று அல்லவா? இராமர் கூறிய அடையாளங்களெல்லாம் என்ன ஆயின? 'கண்களால்' என்று அனுமன் தன் கண்களாலேயே சீதையைக் கண்டதாகக் கூறுகின்றான் என்பர் சிலர். அதுவன்று கம்பரது நோக்கு. 'இரக்கமற்ற அரக்கியர் சூழ்ந்த இடத்தில், சீதையின் கண்களே இரக்கமுடையனவாய்த் தேன்பட்டன. கண்ணிற்கழகு கண்ணோட்டமல்லவா? இலங்கையில் சீதையொருத்தியே தனது இரக்கத்தைக் கண்ணின் மூலம் வெளிப்படுத்தினளாகையால், அனுமன் அவளைக் கண்டு கொண்டான் என்கிறார் கம்பர்.

இப்பொழுது யார் உண்மை பக்தர்; யார் உண்மைக் கவி? தீர்ப்பளியுங்கள்!

கலங்கிய நிலை என்பது ஒன்று. அக்காலத்தில் பேசினான் ஐயா, இராமன் சீதையாகிய மங்கையின் கொங்கையைப் பற்றி. அதுவும் நித்திய பிரம்மசாரி

யான அனுமனிடத்தில் மாத்திரம்; அனுமனின் ஒப்பற்ற குணத்தை அறிந்து என்க. இராமனது கலங்கிய நிலையை அனுமன் அறிந்திருந்தான். அவன் கூறிய அடையாளங்கள் ஒன்றையும் சிந்தையில் கொண்டானில்லை. சிறையிருந்த செல்வியின் கண்ணேட்டமே அவனை அறிய அனுமனுக்கு உதவியது. காவிய இலக்கணத்திற்கு இயைய சீதையை வருணித்த கம்பர் அனுமனின் ஒப்புயர்வில்லாக் குணத்தை வெளிப்படுத்தி, சீதையின் இரக்கமும் தோன்றச் செய்தாரென்பது காணத்தக்கது.

அறிஞர் அண்ணுத்துரையின் கண்ணன், காளையை இழந்தபடியால் மதியையும் இழந்து வேலனிடம் ஏதேதோ உளறினனல்லவா? அதைப் போலவே, கம்பரது இராமன், கொம்பை இழந்தபடியால் மதியையும் இழந்து, அனுமனிடம் ஏதேதோ உளறினன். அனுமன் இராமனது உண்மை பக்தன் என்பதை வெளிப்படுத்திய கம்பர் சிறந்த கவியல்லவா?

---

## நான்காம் டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### தளபதி கம்பர்

'கொழுக்கட்டை எப்படிச் சுட்டார்களோ? அதில் இனிப்பை எப்படி வைத்தார்களோ?' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. 'கம்பர் இராமாயணம் எப்படி எழுதினரோ? அதில் காம ரசத்தை எப்படிப் புகுத்தினரோ?' என்பது தளபதி அண்ணுத்துரையின் புதுமொழி என்று நாம் கூறலாமல்லவா?

காமச்சுவையைக் கம்பர் பெரிதும் கண்டறிந்தவர். இல்லையேல் கடவுள் திரு அவதாரக் கதையிலே காமச் சுவையைப் புகுத்துவாரோ? கெண்டைவிழி மாதருடன் அவர் செண்டு விளையாடியிருக்க வேண்டும். குளத் தங்கரையிலோ, சிங்காரச் சிறு ஓடைகளிலோ நிர்வாண மாய்ப் பெண்கள் அவருக்குக் காட்சி யளித்திருக்க வேண்டும். மலையைக் கண்டதும் கவிக்கு மாதரின் கொங்கைதானு கவனத்திற்கு வரவேண்டும்? கம்பர் கல்வியிற் பெரியரா அல்லது கலவியிற் பிரியரா? கம்பரின் காம உணர்ச்சியே, அவரது இராமகாதையில் காம ரசமாய்ப் பரிணமித்துள்ளது.

இவ்விதமாகவெல்லாம் தளபதி அண்ணுத்துரை எண்ணமிடுகிருர். அடுக்கடுக்காய்க் கம்பரைப் பற்றிய தமது அகக்கண் காட்சிகளை நமக்களிக்கிருர். மங்கையரது மறைவிடத்தைப் பற்றியும் மேலிடத்தைப் பற்றியும் கம்பரது நுண்ணிய வருணனைக்குக் காரணம், அவருக்கு அன்னரிடத்திலிருந்த மோகம் மாத்திரம் அன்று; அம் மோகனங்கிகளிடம் நிகழ்த்திய நுகர்ச்சியே, என்றெல்லாம் தளபதி கண்டு பிடித்துள்ளார். நாம் எப்படி அவையெல்லாம் இல்லை என்று கூறமுடியும்? தளபதி, பட்டாளத்தில் படைகளை அடுக்கடுக்காய் நடத்திக் காட்டுவதுபோல் 'பரவை அல்குல் ஒளிபுறத்தளிப்ப' என்ற பாடலைப் படலம், பக்கம், பா, எண், வரி முதலியவைகளோடு எடுத்துக் காட்டினுரல்லவா தளபதி அண்ணுத்துரை.

'புரிகிறதா?'

'ஆம். புரிகிறது.'

'என்ன புரிகிறது?'

'நான்காவது டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.'

'ஆ, கடவுளே! நாம் அதைச் சொல்லவில்லை. அறிஞர் அண்ணாத்துரையென்று இதுவரை கூறிவந்தோமே; அவர் இப்பொழுது தளபதி அண்ணாத்துரையென்று அழைக்கப்படுகிறாரையா; அதை யறியவில்லையா?'

'ஓ, நன்று! புரிகிறது.'

'படைகளை மேலும் மேலும் நடத்திச் செல்லும் தளபதியைப் போல், மேலும் மேலும் அடுக்கடுக்காய்க் கம்பரது காமரசத்தை எடுத்துப்போடும் திறமையைக் கண்டு அறிஞரைத் தளபதி என்கிறோம்.'

'அப்படியா, செய்தி.'

'ஆம். அவர் ஒரு தளபதி. இராமகாதையில் பற்பல போர்களைப்பற்றி வருணித்துள்ள கம்பர் என்ன சாதாரணப் பேர்வழியா? யுத்தத்திற்குத் தகுந்த சந்தத்தை யமைத்துப் பாடிய கம்பர்; வாட்போர், விற்போர், வேற்போர், மற்போர் முதலியவைகளை அடுக்கடுக்காய் மேலும் மேலும் பாடிய கம்பர் போர்க்கலை யறிந்தவரன்றோ? எனவே கம்பரும் ஒரு தளபதி.

தளபதி கம்பரைப் பற்றி ஆராய்வோம். வடமொழி இராமாயணத்தைத் தமிழில் செய்தாரல்லவா கம்பர். அவர் என்னவோ நல்லெண்ணத்தோடுதான் செய்தார்.

தமிழரின் கலையையும் நிலையையும் குலைக்கும் எண்ணம் அவருக்குக் கிடையாது. வடமொழியின் சிறப்பு வால்மீகியால் உயர்ந்தது. திருமால் வணக்கம் தமிழ் நாட்டில் இல்லாத காலமே இல்லையென்று முன்னேயே

கூறினேமல்லவா? எனவே கம்பர் இராமகாதையை எழுதினர். வால்மீகியைப் பின்பற்றினலும் அவருடைய அடிமையல்லர் கம்பர். ஆரியத்தைக் கவிதையில் கூட்டித் தமிழ் நாட்டில் பரப்ப அவர் எண்ணவில்லை. கம்பர் காலத்திற்குப் பல ஆயிரக் கணக்கான வருடங்களுக்கு முன்னேயே வடமொழி தமிழ்நாட்டில் பரவி யிருந்தது. வடமொழி நூல்கள் தமிழில் செய்யப்பட்டிருந்தன. வால்மீகியின் இராமாயணத்திற்கு ஒப்பத் தமிழில் இராமாயணம் இல்லாதிருந்த குறையை நீக்கக் கம்பர் முற்பட்டார். அவரது முயற்சி எளிதில் முடியக் கூடியதா? ஒட்டக்கூத்தர் என்ற புலவர் பெருமான் கம்பரது இலக்கிய விரோதி. கம்பருடைய கவிகளில் குற்றம் காண்பதே அவரது பொழுதுபோக்கு.

இம்மட்டோ? தெய்வம் இல்லை என்பவர்கள் எக்காலத்திலும் உண்டு. 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்' என்பவர் அக்காலத்திலும் இருந்தனர். வடமொழிக் காவியங்கள் பெரும்பாலும் இன்பச் சுவையை மிகைப்படுத்திப் பேசுவன. காளிதாசன் போன்ற வடமொழிப் புலவர் காமச்சுவையை வருணிப்பதில் நிகரற்றவர். இதனல் தமிழ்க் காவியங்களிலும் 'காமரசம்' கரைகடந்து ஓடத் தொடங்கியது. அது அக்காலத்துப் புலவர்களின் செய்கை. காவியம் எழுதி அரங்கேற்றுவது எளிதன்று. இராமாயணத்தை எல்லோரும் ஒப்புக்கொள்ளும் வழியில் எழுதவேண்டும். பெருங்காப்பிய நிலையைப் பற்றிப் பேசும் நூல்கள் கூறும் இலக்கண வரம்பிற்குள் வரும்படி எழுதவேண்டும். சுவையணிகளை மறத்தல் கூடாது. அவைதாம்,

“வீரம் அச்சம் இழிப்பொடு வியப்பே
காமம் அவலம் உருத்திர நகையே”

எனப்படும்.

தளபதி கம்பர் என் செய்வார்? பாவம்! அவருக்கு விரோதிகள் பலர். அவர்களெல்லோரும் அணிவகுத்துப் பட்டாளத்தார் போல் எதிர் நின்றனர். தமது காவியத்தைக் சோற்சுவை பொருட்சுவை தோய எழுதினுர். ஆயினுமென்ன? குற்றம் காணவேண்டுமென்ற ஒரே நோக்கோடு அணிவகுத்து ஈசல்போல் இளம்பினர் விரோதிகள்.

அக்காலத்தில் தளபதி அண்ணுத்துரையா யிருந்தால் என்ன செய்திருப்பாரோ யாம் அறியோம். எதிர்த்துப் போரிடுவது ஒரு வழி. தளபதி அண்ணுத்துரை கூறுவதுபோல் எதிரியின் பட்டாளத்தைச் சதுப்பு நிலப் பகுதியிலே புகும்படி செய்து மடியச் செய்வது மற்ருெரு வழி. நெப்போலியன் பெரும்படையோடு ‘ருஷியா’ மேல் படையெடுத்த காலத்தில், ருஷியர் பின்வாங்குவதுபோல் பாசாங்கு செய்து நெப்போலியனது படையைச் சதுப்பு நிலத்தில் நுழையச் செய்து, தோற்கடித்தனர். இவ்வரலாறு தளபதி அண்ணுத்துரை சரித்திர மூலம் அறிந்திருப்பர். ஆனுல் கம்பருக்குத் தெரியாத யுக்தியில்லை.

போர்க்கலையில் வல்ல கம்பர் தம் விரோதிகளை யுக்தியால் வெல்ல முற்பட்டார். பல ரசங்களையும் எழுதப் புகுந்ததில் காம ரசத்தையும் கையாண்டார். அசடர்களை அதில் ஈடுபடச்செய்து தமது இராமாயண அரங்கேற்றத்திற்குத் தொல்லை தராதபடி வழிதேடிக்கொண்

டார். அந்தப் பன்னாடைகளும் அப்படியே காமரசத்தைச் சுவைத்து, அதில் ஆழ்ந்து, பல்லை யிளித்துப் பரவசமாகி, ஒவ்வொருவனும் "அண்டம் பலவும் இங்கே தெரியுதண்ணேன்! ஆதிசேஷனும் கிட்டே தூங்குதண்ணேன்" என்று பாடி கம்பரசத்தில் காமரசம் ஒன்றையே பருகி, மதியிழந்து மயக்கம் தெளியாது மாய்ந்தனர். நாதமுனி போன்ற வைணவப் பெரியோர், கம்பர் தமது விரோதிகளைச் சதுப்பு நிலத்தில் செலுத்தி மாய்க்கும் ஆற்றலைக் கண்டு மற்ற ரசங்களை வியந்து அரங்கேற்றினர். கம்பரின் வெற்றி ஓர் ஒப்பற்ற தளபதியின் வெற்றிக்கு ஈடல்லவா?

இராமர் சீதையின் கொங்கைகளை மணிக்குடங்கள் என்றும், தங்க நிறத்துச் சிமிழ் என்றும் கூறினாரென்று கம்பர் கூறுவதெல்லாம் பகுத்தறிவில்லாப் பன்னாடைகளை இளிச்சவாயர்களாகச் செய்வதற்கே. கவியின் நுட்பம் அறிந்தோர் காமரசத்தைப் போற்றாது மேலெழுந்த வாரியாகப் படித்துச் செல்வர். மற்ற ரசங்களை மறந்து, காமரசத்தையே காண்பது நேர்மையன்று.

---

## ஐந்தாம் டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### எலிவாலும் காமரசமும்

'சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை' என்பது பழமொழி. கற்றுக்கொடுக்காததைக் கிளி சொல்லாது.

'மண்டமர் கடந்தவேல் நளன் வந்தான்'

என்று தமயந்தியின் கன்னிமாடத்திருந்த கிளி கூறிய

தாக நைடதம் கூறும். நளனை நினைத்து உருகும் தமயந்தியின் சோகம்நீங்கப் பாங்கியர் அவளிடம் அடிக்கடி, 'நளன் வந்தான், நளன் வந்தான்' என்று கூறியதைக் கேட்டறிந்த கிளியும் அங்ஙனமே செய்தது. கேட்டதையன்றிக் கேளாதவைகளைக் கூறும் ஆற்றல் கிளிக்கு இல்லை. நன்னூல் எழுதிய பவணந்தியும் இடைமாணுக்கரைக் கிளிக்கு ஒப்பிட்டார். திருப்பாவை பாடிய ஆழ்வார் திருமகளாரும் 15-ஆம் பாசுரத்தை 'எல்லே இளங்கிளியே' என்று தொடங்குகிறுர். உட்பொருளை உணரும்பொழுது இங்கு விளிக்கப்படும் கிளி திருமங்கை மன்னன் என்பது பெறப்படும்.

நம்மாழ்வார் பாடல்களையே சாரமாகக் கொண்டு பாடியபடியால் திருமங்கை மன்னன் கிளி என்றழைக்கப்பட்டார்.

கம்பரச ஆசிரியர் கிளியைப் போலவே திரும்பத் திரும்பக் கூறியதையே கூறுகிறுர். கடவுள் ரசம் கடுகத்தனையும் காண இயலாத காம ரசத்தைத்தான் கம்பர் தமது இராமாயணத்தில் பாடியுள்ளார் என்பது கம்பரச ஆசிரியர் அடிக்கடி கூறுவது.

* * *

'அருச்சுனு !'

'ஐயனே !'

'நீ மரத்திலுள்ள பட்சிகளை யெல்லாம் காண்கின்ருயா ?'

'இல்லையே ! தாங்கள் குறி பார்க்கச்சொன்னது தலையில் கொண்டையுள்ள பட்சியைத்தானே !'

'ஆம். அதனருகிலுள்ள மற்ற பட்சிகள் உன் கண்களில் படவில்லையா?'

'இல்லையே! அண்ணலே. கொண்டையுள்ள பட்சியைக் கண்டுபிடித்துக் குறிபார்த்த பிறகு வேறொன்றும் என் கண்களில் படவில்லையே!'

'நன்று! அப்பட்சியின் கழுத்தைக் குறி பார்'

'இதோ! அப்பட்சியின் கழுத்து ஒன்றே தெரிகின்றது, ஐயனே!'

'நன்று! நீயே வில்லாளி' என்று மெச்சினார் அருச்சுனனுடைய ஆசிரியரான துரோணர்.

* * *

அறிஞர் அண்ணாத்துரை கம்பரின் கவித்திறனை டி. கே. சி., பி. ஸ்ரீ., சேதுப் பிள்ளை முதலாய புலவர் பெருமக்களிடம் கேட்டறிந்தாலும் கம்பரது காமரசத்தைப் பின்னர் தமது நண்பரொருவரிடமிருந்தே அறிந்ததாகக் கூறுகிறார். அவ்வளவுதான். அதுமுதல் அவர் கண்களில் காமரசமே படுகிறதன்றி வேறொன்றும் படுவதில்லை. அருச்சுனனும், தளபதி அண்ணாத்துரையும் குறி பார்ப்பதில் ஒத்த திறன் உடையவரல்லவா?

* * *

ஐந்தாம் டோஸில் தளபதியின் இலக்கு, பாலகாண்டம், மிதிலைக் காட்சிப் படலம் 35, 36-ம் பாடல்கள். கண்ணுவது, கண்ணையாவது, கவ்வுவதாவது? அம்மட்டோ, இராமனுடைய கண்கள் இன்னும் என்ன செய்தன? சீதையின் கொங்கைகளிலே தைத்தன என்று சொல்வது? என்று கேட்கிறார் தளபதி.

கம்பர் வேறு எப்படி எழுதி யிருந்தால் தளபதி ஒப்புக்கொள்வாரோ? பெண்ணென்றால் பேயும்

இரங்குமன்றோ? என்னையா! ஒரு பெண்ணின் கொங்கையில் கண்கள் தைப்ப தென்றால் அப்பெண்ணிற்கு எத்தகைய கொடிய 'ஊறு' ஏற்பட்டிருக்கும், அதைக் கம்பர் எண்ணிப் பார்த்து எழுத வேண்டாமா, என்றெல்லாம் தளபதி வருந்துகிறார் போலும்! கம்பர் தமது இராம காதையை வளர்த்துக்கொண்டு போவதற்கு ஒரு தையலையா இப்படி வாட்ட வேண்டும் என்று நினைக்கலாம். கம்பர்தான் என்ன? தமது கதையை ஆரம்பித்தவுடனே முடித்திருந்தால் எவ்வளவு அழகாயிருக்கும்!

'இராமர் மனைவியை இராவணர் கொண்டுபோனார். அனுமார் போய் அடித்துப் பிடித்து அழைத்து வந்தார்' என்று கதை சுருக்கமாயிருந்தால் நன்றாயிருக்காதா? என்னே! கம்பரின் அறியாமை!!

பாம்பின் படமும் தேர்த் தட்டும் அணங்கின் அடிவயிற்றிற்கு உவமானங்கள், கவி வேறு; கலயம் வேறு. கடவுட் கதை வேறு; அதில் வரும் சிருங்கார ரசம் வேறு. அறுசுவை யுண்டி ஆரோக்கிய மளிக்கும். ஒரு விதச் சுவையையே சுவைத்தால் அது வேப்பெண்ணெய் ஆகிக் குமட்டாமல் வேறு என்ன செய்யும்?

கம்ப ராமாயணம் பத்தாயிரம் பாடல்களை யுடையது. அவற்றுள் சிருங்கார ரசத்தின்பாற் படுவன, சத விதப்படி கணக்கிட்டால் மிகச் சிலவே, நாக்குக் கசந்துபோன நோயாளிக்கு இனிப்பும் கசக்குமாப் போலே, காம ரசம் காண்பது ஒன்றே உடலில் ஊறி விட்டதால் வேறு ரசம் அறிய முடியாத நிலை வந்தது போலும்!

விருந்துண்ணச் சென்றவர்களில் ஒருவர், அறு சுவை யுண்டி அளிக்கப்பட்டுங்கூட, சுண்டைக்காய்க் கறியை மீண்டும் மீண்டும் கேட்டு, மேலும் மேலும் பெற்று, அது ஒன்றையே சுவைத்து வேறு சுவை யறி யாது நாக்குக் கசந்து பரிதவிக்கும் நிலையைப் பார்க்க முடியாதல்லவா ?

* * *

எலி பல நாடுகளிலும் உண்டு. தமிழ் நாட்டில் ஒரு காலத்தில் எலி மயிரால் ஆடை நெய்ததுண்டு: எலிக்கு நீண்ட வாலுண்டல்லவா ? நீண்ட வாலைக் கடவுள் அதற்கு ஏன் கொடுத்தார் ? அந்த வாலை எண்ணெயில் தோய்த்து எண்ணெயை நக்குவதற்கு எலி உபயோகிக் கிறது. எண்ணெய் எலியின் உடலில் காம ரசத்தை வளர்க்கிறது.

இதோ பாருங்கள் வேடிக்கையை! மேல் நாட்டு ஆராய்ச்சியாளர் ஒருவர் பல எலிகளைக் கூண்டி லடைத்து ஆகாரம் முதலியன அளித்து வளர்த்தார். அவர் எலிகளை வளர்த்தார்! அந்த எலிகளோ சும்மா இராமல் காம ரசத்தை அனுபவிக்கத் தொடங்கின. எலிகளின் அபிவிருத்தியைச் சொல்லவும் வேண்டுமோ? அதுவும் பூனையிடமிருந்து யாதொரு தீங்கும் வாராமல் காக்க ஆராய்ச்சியாளர் இருந்தபடியால் அவ்வெலிகள் பேரன், "கொள்ளுப் பேரன், எள்ளுப் பேரன்" எடுக் கத் தொடங்கின. ஆராய்ச்சியாளர், எலிகளைப் போற்றி உணவூட்டி வளர்த்தாலும், இரக்கமின்றி ஒரு காரியம் செய்து வந்தார். கூண்டில் புதிதாய்த் தோன்றிய இளம் எலிகள் ஒவ்வொன்றின் வாலையும் இரக்கமின்றி நறுக்கி எறிந்தார். ஐயோ ! இஃதென்ன கொடுமை என்று

நீங்கள் கேட்கலாம். வாலில்லாத எலிகளுக்குப் பிறக்கும் எலிகள் வாலில்லாமற் பிறக்கின்றனவா என்பதைக் காணவே அவர் அவ்விதம் செய்தார். பத்துப் பதினைந்து தலைமுறைகளுக்குப் பிறகுங்கூட வாலில்லா எலிகள் வால் உள்ள எலிகளையே ஈன்றன. ஏன் தம் ஆராய்ச்சிக்கு எலிகளை உபயோகித்தாரென்றால், எலிகள் விரைவில் பேரன் பேத்திகளை எடுப்பதால் பல தலைமுறைகளுக்குப் பிறகாவது வாலில்லா எலி பிறக்கின்றதா என்பதைத் தம் ஆயுள் காலத்தில் காணவே அவர் அவ்விதம் செய்தார். பல தலைமுறைகளுக்குப் பிறகும் வாலுள்ள எலிகளே தோன்றிக் கொண்டிருந்தமையால், ஆராய்ச்சியாளர் ஒரு சிறந்த முடிவிற்கு வந்தார். உடலில் காம ரசத்தை வளர்க்கும் எண்ணெயை உட்கொள்ள வால் தக்க சாதனமாகையால் ஒவ்வொரு எலியும் வாலுடனே பிறக்கின்றது என்பது அவரது முடிவு.

சுண்ணும்பில் இருக்கிறது சூட்சுமம் என்பது பழமொழி? 'வாலில் இருக்கிறது சூட்சுமம்' என்பது புதுமொழி. எலியின் உடலில் காம ரசத்தை வளர்க்கும் எண்ணெயை உட்கொள்ளச் சாதனமா யிருப்பது வால். உலகில் தோன்றிய உயிருள்ளவை யாவும் பலவித ரசங்களை உடையன. கடவுள் மனிதனைத் தோன்றி மனிதன் போலவே நடிப்பதனுல் மனிதனுக்குள்ள ரசங்களைத் தனக்கு மாத்திரம் இல்லாமற் செய்து கொள்ளான் என்பது கம்பருடைய எண்ணம் என்பது அறியத்தக்கது.

---

## ஆறும் டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து
## பெண்களின் மேலிடம்.

நகைச் சுவை மன்னர் N. S. கிருஷ்ணனும், நகைச் சுவை நளினி T. A. மதுரமும் திருநீலகண்டரில் நடத்திய 'காமிக்'கை எடுத்துக் காட்டுகிறார் தளபதி அறிஞர். தம்பியின் மனைவியிடம் தவறுதலாய் நடப்பது சகஜம் என்று கூறும் புத்தி ஆகாது என்கிறார் நகைச்சுவை அரசு. பிழை பொறுப்பது பெரியோர் கடமை. ஆயினும் மிகப் பெரிய பிழையைப் பெரியோர் பொறார். எனவே மிகப் பெரிய குற்றத்திற்கு மரணமே தண்டனை என்று இராமர் கூறியது அறியத்தக்கது.

'கம்பரின் காமக்கள் இப்படியும் வழிந்தோடலாமா? ஆபாச வருணனைகள் ஆகுமா? எந்தச் சந்தர்ப்பமாக இருந்தாலும் பெண்ணின் அங்கங்களின் நினைவா? வாயிலில் கட்டிய வாழையும் மங்கை. கம்பத்தில் கட்டிய கமுகும் கன்னியின் கழுத்து. முத்து மாலையில் பாவையின் பற்கள். சேலை கட்டிய கம்பமும் கன்னியே. வாழையின் வளம், கமுகின் கவர்ச்சி, முத்து வடங்களின் ஒளி, பூர்ண கும்பத்தின் அழகு ஆகியவைகளை வருணித்ததோடு கம்பர் நிற்கலாகாதா?' என்றெல்லாம் தளபதி உள்ளங்கை நெல்லிக் கனிபோல் எடுத்துக் காட்டுகிறார்.

•

நாமும் அவருக்கு எடுத்துக் காட்டினோம். கம்பரசத்தில் வரும்!காம ரசத்திற்கு அதிக இனிப்பை யூட்டி விட்டாரையா கம்பர். காரணம் கம்பர் காலத்தில் காம ரசத்தைப் பெரிதும் போற்றிய புல்லர்கள் அரங்கேற்றுங் காலத்தில் துள்ளிக் குதிக்காதபடி செய்வதற்கே.

நிற்க, கம்பருக்குக் காம ரசமே கிடையாது என்று யார் கூற முடியும்? அம்பிகாபதி என்ற மகனும் தண்டி யென்ற பேரனும் கம்பருக்கு உண்டு என்றறிகிறோ மல்லவா? இம்மட்டோ வடமொழிக் காவியங்களில் காம ரசம் நிறைந்து கிடக்கின்றன அல்லவா? அவை களை யவர் அறிந்திருக்க மாட்டாரா? சாமுத்திரிகா லக்ஷணமே தனி நூலாக விளங்குகின்றதே. கம்பர் அதை ஒரு கை பாராமலா இருந்திருப்பார்?

ஆகையால் கம்பரது நற்குணத்தில் நமக்குச் சந்தே கம் வரக் காரணம் இல்லை. குளக்கரையிலோ வேறு எங்கோ கம்பர் மங்கையரிடம் தகாத வழியில் தமது இச்சையைச் செலுத்தி யிருப்பார் என்று கூறுவதற்குத் தக்க காரணம் இல்லை.

* * *

கம்பர்,

'கொங்கையி னிரைத்தன கனக கும்பமே'

என்றல்லவா கூறியுள்ளார்?

இப்படியும் கம்பர் கூறலாமா? கும்பத்தைக் கண் டால் கன்னியரின் கொங்கையை நினைவூட்டுகிற நெஞ்சம் கம்பருக்கு உண்டானது அவரது கல்விச் செல்வத்தை விளக்குகிறதா, காமச் சேற்றைக் காட்டுகிறதா என் பதே தளபதி அறிஞரின் கேள்வி. தேவனின் திருவிளை யாடலை எழுதப் போந்தவருக்கு இது முறையா என்பது அவர் கேட்கும் மற்றொரு கேள்வி.

கம்பர் காலத்தைக் கவனிப்போம். கவிதை யன்றி, சிற்பம், சித்திரம் ஆகியவைகளிலும் சிறந்திருந்த காலம் அது. அக்காலத்துச் சிற்பங்களைக் கவனியுங்கள்.

'ஆனந்த விகடன்', 'கல்கி' முதலியவைகளில் வெளி யாகும் சிற்பங்களை அறிவீர்களன்ருே? கல்லில் செதுக் கப்பட்ட பெண்ணுருவங்கள் பெரும்பாலும் பருத்த கொங்கைகளை யுடையன. ஹொய்சளர்களின் சிற்பங் கள் முதுகின் கீழுள்ள பாகத்தைப் பெருக்கிக் காட்டும். இதை மனத்தில் கொண்டே புலவர்களும், 'உடுக்கை போன்ற இடை' என்றும், 'ஈக்காற்றுக்கு ஆற்ரு இடை' என்றும், 'அஞ்சனம் எழுத லாற்ருது ஐயவோ என்று நையும் வஞ்சி நுண் இடை' என்றும் கூறி யுள்ளனர்.

* * *

'மின்னற் கோடி அவள்'

'மின்னற் கொடியா?

மின்னல் தோன்றி மறையுமே? அப்படி அவள் மறைவாளா? இல்லையேல், உவமானம் பொருந்துமா?

'கொடி போன்ற பெண் மின்னல் போன்றவளே யன்றி, மின்னலைப்போல் தோன்றி மறைய மாட்டாள். ஏனெனில், அவளுடைய பருத்த தனங்களின் கனம் மறைய முடியாதபடி செய்கிறது.'

இப்படி யெல்லாம் வருணித்த காலம் அது. இப் பொழுதும் தென்ளுட்டில் சில இடங்களில் பெண்கள் மேலாடை அணிவதில்லை. கஞ்சுகம் தரிப்பது தற்காலம் பெரிதும் விரும்பிப் போற்றப்படுகிறது. எனவே கம்பர் "மாதரின் தனங்கள் போலப் பொன்மயமான பூரண கும்பங்கள் வரிசையாய் அமைக்கப்பட்டன" எனக் கூறியதில் அதிசய மொன்றுமில்லை.

தேவனின் திருவிளையாடலில் காமச் சுவை வர லாமா? என்பது மற்ருெரு கேள்வி.

தேவனை யேற்றுக்கொண்ட பிறகு, அவனது தேவி யையும் ஏற்றுக்கொண் டிருக்கிறேம். 'எல்லாம் ஆரிய மயம், ஆரிய மாயை' என்பவர்களுக்கு இது புரியாது. தேவியைக் கற்சிலையாகவும், செப்புச் சிலையாகவும் வைத்தே பூசிக்கிறேம். சிலை செய்தவர்கள் அக்காலக் கொள்கைப்படி செதுக்கியுள்ளார் அல்லது செய்துள் ளார். பெண் தெய்வச் சிலைகளுக்குப் பருத்த கொங்கை களை அமைத்தது தக்க காரணம் பற்றியே. பார்வதி யல்லது இலக்குமியை 'உலக மாதா' என்றழைக் கிறேம். எதனுல்? அத் தெய்வம் தன் மக்களாகிய நமக்கு உணவளித்துக் காப்பதனு லன்றே? உலக மாதாவாகிய அன்னை, தன் முலைப்பாலைத் தன் மக்க ளுக்கு ஊட்டுகின்றவள் என்ற காரணத்தால் பெண் தெய்வச் சிலைக்கு அந்த அவயவம் அப்படி அமைக்கப் பட்டது. கடவுளாவது அவருக்கு மனைவியாவது என் போருக்கு இது புரிவதேது?

குரு என்று அழைக்கப்படும் ஆசிரியர் மாணவ ரைத் தேடிக்கொண்டு வந்து போதிப்பர். தம் கல்வியை வீணுக்கமாட்டார். அருகில் குழந்தை யில்லாதபோது முலைக் கடுப்பால், பாலைத் தரையில் பீச்சும் அன்னை யைப் போலக் கல்வியின் நிறைவு அவர்களை வாளா இருக்க விடாது. பாலின் நிறைவு மக்களை மகிழச் செய்வதற்கே. இதை யறிந்த பெரியோர் பெண் தெய் வங்களின் தனங்களைப் பெரிதாகக் காட்டிச் சிலை செய் தனர். அதை யொட்டியே கம்பரும் மாதரின் தனங் களைப் பேசும் நிலையில் நின்று புகழ்கிருர். இஃது அக் கால வழக்கு என்றறிதல் வேண்டும். அக்கால மாந்த ரது கொள்கைப்படி குற்றத்தின்பாற் படாது. 'அரும்

பனைய கொங்கை, கரும்பனைய சொல்' ஆகியவை யெல்லாம் கவியின் சாதுரியமே.

* * *

ஆரும் டோஸில் அறிஞர் தளபதி, விஞ்ஞானியாகவும் விளங்குகிருர், காமரா, போட்டோ, குளோஸப், எக்ஸ்ரே முதலியன தற்கால விஞ்ஞான வசதிகள். சினிமாப் படம் பிடிப்பவர்களின் கலேயே தனி. அறிஞர், அண்ணுத்துரை, கம்பரது வருணனைகளை 'எக்ஸ்ரே' மூலம் அம்பலப்படுத்துகிருர்!

விஞ்ஞானி அண்ணுத்துரை :—குரும்பையளவிலே செவிலிக்கும் அரும்பளவிலே கன்னியருக்கும் மேலிடம் இருக்கும் என்று கூறுவது தேவ கதையா?

பதில் :—தேவ கதையன்று தேவ கதையில் கம்பனின் கற்பனை.

வி. அண்ணு :—தேன் தமிழ்! இதற்குத்தான் தத்தமா?

பதில் :—தேன் தமிழில் எத்தனையோ இருக்கின்றன. அவைகளுள் இது ஒன்று. தமிழ்த் தேன் தெவிட்டாமல் இருக்கப் புலவர் புகுத்தும் காரம்.

வி. அண்ணு :—காமிரா குளோஸப் மட்டுமல்ல. எக்ஸ்ரேகூட எடுக்கிருரே கம்பர்.

பதில் :—எக்ஸ்ரே என்னதென்பது தெரியாத காலத்தில் அக்கலேயில் கம்பர் தேர்ந்தவர் என்ருல் அவரது மேன்மை விளங்கவில்லேயா?

அவர் சொல்வது ஒன்று. தாங்கள் பொருள் கொண்டது வேறு. இதனுல் வந்த விளைவு வேடிக்கை யானது. பெண்களின் அணிகலன்கள் பல. எந்த அணி கலனை எங்கே அணிவதென்பதும் யார் அணிவதென்ப தும் கம்பருக்குத் தெரியாதன அல்ல. நீர் கூறுகிறபடி, கம்பர் பெண்களைப்பற்றி எல்லாம் அறிவாரன்றோ? சற்று யோசித்துப் பார்த்திருந்தீர்களேயானுல் 'எக்ஸ்ரே' விஷயமே வரக் காரணம் இல்லை. 'மேகலை' என்ருல் 'பெண்ணின் மறைவிடத்தில் அணியும் அணி கலன்' என்று யாரையா சொன்னது? பெண் குழந்தை களுக்கு மறைவிடத்தில் அணியும் அணிகலன் உண்டு. இராமன் வில்லை யொடித்த காலத்தில் சீதை யென்ன கைக்குழந்தை என்று எண்ணிப் பேசுகிறீரா? 'மேகலை' யென்பது வைர வைடூரியங்கள் பதிக்கப்பட்ட ஒட்டி யாணம். இதையே பெண்கள் ஆடை நழுவாதபடி இடுப்பில் அணிவர். இராமனே வில்லை வளைத்தவன் என்பதறிந்த சீதையின்,

வாமம் மேகலை = அழகான எழு கோவைமணி. (ஒட்டியாணம்)

இற = அறுந்து கீழே விழும்படி.

அல்குல் = அடிவயிறு.

வளர்ந்தது = (மகிழ்ச்சியால்) பருத்தது.

அழகான மேகலாபரணமாகிய ஒட்டியாணம், மகிழ்ச்சி யால் பருத்த இடுப்பில் நில்லாது அற்று விழுந்தது என்க.

அறிஞர், தளபதி, விஞ்ஞானி அண்ணுத்துரை அவர்கள் மேகலை என்பதற்கு 'அரை மூடி' என்று பொருள் கொண்டு 'சீதையின் மறைவிடம்' விங்கி

மேகலாபரணம் அற்று விழுந்தது என்று அல்லற் படுகி ருர். மறைவிடமாவது விங்குவதாவது? மகிழ்ச்சியால் சீதையின் அடிவயிறு பருத்தது என்று கம்பர் கூறினுல், மறைவிடம் பருத்ததாகக் கம்பர் கூறுவதாகக் கொண்டு விபரீதம் காண்பது ஏனே?

பஞ்ச காவியங்களுள் ஒன்ருகிய மணிமேகலையை அறிஞர் அண்ணுத்துரை படித்தவர் என்று நினைக் கிருேம். அப்படியானுல் மேகலை யாது என்பது அவ ருக்கு நன்ருய்த் தெரியும். அப்படி யிருந்தும் அவர் அதை மறைவிடத்தில் அணியும் அரசிலையாகிய அணி கலன் என்று கொண்டது, கம்பரசம் காமரசமே என்று சாதித்து 'பூபோட்ட கிளாசிலே, போடப்பா இரண்டரை. சேரப்பா காமத்தை' என்று பாமரர் கூறி, கம்பர்மேல் காய்ந்து விழ வேண்டுமென்ற நோக்கமன்றி வேறு யாது காணக் கிடப்பது?

பட்டினுலான நாணில் கோக்கப்பட்ட நவரத்தி னங்களாலாகியதே மேகலை. இது ஆடை நழுவாம லிருக்கப் பெண்கள் இடுப்பில் முற்காலத்தில் அணிவது வழக்கம். தற்காலத்தில் ஒட்டியாணத்தைப் பெண்கள் அணிவதுபோல், முற்காலத்தில் மேகலை அணியப்பட் டது என்க. எனவே முற்கால மேகலை, தற்கால ஒட்டி யாணத்திற்கு நிகர்.

---

## ஏழாவது டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து.

### நதியும் மேகலையும்

உலகம் பலவிதம் என்பது பழமொழி. இப் பழமொழி ஆழ்ந்த பொருளை யுடையது. உலகத்தில் பற்பல தாவரங்கள்; ஏனெனில் சீதோஷ்ணங்கள் பலவிதமானவை. விதவிதமான விளை பொருள்கள்; தாதுப் பொருள்கள்; பட்சிகள்; மிருகங்கள்; நீர் வாழும் பிராணிகள்;—இவைகளெல்லாம் ஒன்றிற்கொன்று வேறுபட்டவை, ஆயிரக்கணக்கானவை. மனிதனோ இடத்திற்கிடம் வேறுபட்ட நடை, உடை, பாவனைகளை யுடையவன். அவன் பேசும் மொழிகளோ! எண்ண முடியாதவை!! நாகரிகமோ! நாளுக்கு நாள் பெருகுகிறது, இன்று நவீனம் என்று காண்பது, நாளை மாறி விடுகிறது. நவீனம் என்று தைக்கப்பட்ட உடை, உடுத்துக கிழிவதற்கு முன்னேயே 'கர்நாடகம்' ஆகிவிடுகிறது. மொழியும் அப்படியே; கற்பனையும் அப்படியே; கலையும் அப்படியே. நாகரிகமும் மாறிவிடுகிறது. புதியன, பழையவைகளை மாற்றி விடுகின்றன. மாருதவை யாவை? மலைகூட மாறி விடுகிறது. நதிகள் மாறுகின்றன. குடுமி போய் 'கிராப்' வருகிறது. அதுவும் போய் மொட்டைத்தலை போற்றப்படுகிறது.

ஆம்! குடுமி; கிராப்; மொட்டைத்தலை—இவை யாவும் வெளி மாறுதல்கள். அகமாறுதலைப்பற்றி அறிஞர் அண்ணாத்துரை பேசுகின்ருர். அகத்தில் இருப்பது ஒன்று. புறத்தில் 'எம்பெருமான் திருவடிகளே சரணம்' என்று கூறி ஏமாற்றுகிருர்கள் என்று அறிஞர் அண்ணாத்துரை கூறுகிருரன்ரே? அவர் போலி பக்தர்

களை இழித்துக் கூறுகிருர். சில போலி பக்தர்கள் எந் நாட்டிலும் எக்காலத்திலும் இருப்பர். சிற்சில சமயங் களில் அவர்களது தொகை ஏறிக்கொண்டே போகும். அறிஞர் போன்றவர் இடித்துக் கூறுவதையறிந்தாவது அவர்கள் திருந்துவாரேயானுல் 'கம்ப ரசம்' என்ற நூல் வீணுகாது தக்க பயனை யளித்தது என்று கூற இடமுண்டாகும். 'தான் சிறிதாயினும் தக்கார் கைப் பட்டக்கால் வான் சிறிதாப் போர்த்து விடும்.' என்பதற் கேற்பத் தவறுகிறவர்களையும் திருத்தும் ஆற்றல் எதிர் பாராத இடத்திலிருந்து வருவதானுல் 'உலகம் பல விதம்' என்பதற்குத் தக்க சான்ருகும்.

ஆம். உலகம் பலவிதம். அறிஞர் அண்ணுத் துரை கூறும் சில விதங்களைப் பாருங்கள். 'திரைவிடு வேலை' யில் ஈடு பட்டிருப்பவர் சிலர்; 'சாம்பிள் பழம்' இனிப்புத் துண்டாகக் கொடுத்து புளிக்கும் பழங்களைக் கூடையிலே நிரப்பிக் கொடுத்து விடுகிருர்கள் வேறு சிலர். ஓட்டை ஒடிசலைத் தட்டி நிமிர்த்தி 'முலாம் பூசி' ஏமாற்றி விடுகிருர்கள் இன்னுஞ் சிலர். காரிகைகள் மீது 'களங்கம்' படியச் செய்து விடுகிருர்கள் வேறு சிலர்; காணக்கூடாததைக் கண்டுவிட்டோமென்று களிப்புறுகிறவர் மற்றுஞ் சிலர்; இம்மட்டோ! சில வைதீகர்கள் குளத்தருகே அமர்ந்துகொண்டு அங்குவந்து போகும் அரிவையர்மீது கடைக்கண்ணைச் செலுத்துகின்ற னரே! என்றெல்லாம் அறிஞர் பரிதாபப்படுகிருர் தமது நூலில். உலகம் பலவிதம் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? உலகந்தான் பலவிதம். உலகிற் ருேன் றும் புலவர்களுமா பலவிதமா யிருக்கவேண்டும்! அறி ஞர் அண்ணுத்துரையின் ஒன்பதாவது டோஸைப் படித்துப் பாருங்கள்!

நைடத ஆசிரியர் 'முட்டும்' விதம். வேதநாயகம் 'குடும்பப் பண்பு' விதம். டெனிசன் 'கற்பு' விதம். கம்பர் 'காம' விதம். பாரதிதாசன் 'லாங். ஷாட்' விதம். என்னே இவ்வுலகம்!

அறிஞர் அண்ணுத்துரை ஓர் ஒப்பற்ற அறிஞர். இழவிலும் கம்பர் மங்கையர் கொங்கையைப் பாடுகிருரே என்று வருந்துகிருர். இங்கே பாருங்கள்! இழவு வீட்டில் ஒரு திருவாட்டி அழுதுகொண்டே,

"பந்தலிலே பாவக்கா
பந்தலிலே பாவக்கா" என்ருள்.

மற்ருெருத்தி,

"போகையிலே பாத்துக்குவோம்
போகையிலே பாத்துக்குவோம்"

என்று பதிலுரைத்தாள். வீட்டுக்காரஅம்மாள், அவ்விரு திருவாட்டிகளும் பாகற்காயைக் கொள்ளையடிக்க நினைக்கிருர்களே என்று பயந்து,

"அது விதைக்கல்லோ விட்டிருக்கு
அது விதைக்கல்லோ விட்டிருக்கு"

என்று 'எச்சரிக்கை' செய்தாள். இக்கதையை அறிஞர் அண்ணுத்துரை தமது ஏழாவது டோஸில் கூறுகிருர்.

'புரிந்ததா?'

'ஆம். புரிகிறது' ஒவ்வொருத்தியும் கைகாரி.'

'நல்லது. கீழே வரும் பாட்டைப் பாருங்கள் அறிஞர் அண்ணுத்துரை எழுதியதன்று. ஒரு புலவர் பாடியது.'

" அத்திக்காய் காய் காய்காய் ஆலங்காய் விண்மதியே
இத்திக்காய் காய்த்துனக் கென்னபயன் சற்று மேன்மேல்
பற்றில்லா அவரைக்காய் பாவைக்காய் கோவைக்காய்
சுற்றத் தவரைக்காய் தூது விளங்காய்."

"அறிஞர் அண்ணாத்துரை கதையில் கூறியது பாகற்காயை மாத்திரம். இப்பாட்டில் எத்தனையோ காய்கள் இருக்கின்றனவே"

'இதேது கூத்து ?

'கூத்தா ! பல காய்கள் இருந்தால் பலவிதக் கறி, கூட்டு, பச்சடி செய்யலா மல்லவா ?

அத்திக்காய்க் கறி ; ஆலங்காய்க் கூட்டு ; அவரைக் காய்ப் பொரியல்; பாகற்காய்க் குழம்பு ; கோவைக் காய்ப் பச்சடி ; என்ன ! நாக்கில் உமிழ்நீர் ஊறவில்லையா ?'

" ஆம். ஊறுகிறது.'

"நன்றாய்ச் சொன்னீர் !" காயுமில்லை, கறியுமில்லை. 'வெல்லம், சர்க்கரை, தேனப்பா, ஏட்டில் எழுதிப் பாரப்பா' என்பதுபோலத்தான்! இந்தப்பாட்டிலுள்ள காய்களில் ஒன்றாவது கறிக்கு உதவாது. பொருளைப் பாருங்கள்."

ஒரு அரசன் தன் பட்டத்து அரசியை மதியாது, வேறு ஒரு பாவையைக் கூடி வாழ்ந்து வந்தான். பட்டத்தரசியோ வாடி வதங்கினாள். சும்மா இருந்தானா சந்திரனாகிய 'குறளன்' வந்துவிட்டான் ஆகாயத்தில். அவ்வளவுதான் ; கம்பர் தமது இராமாயணத்தில் தயாரித்திருந்த 'காம ரசம்' இருக்கிறதல்லவா ? அதையெல்லாம் திரட்டி அவ்வரசியின் கொங்கைகளில்

கொட்டி விட்டானையா அந்தப் பாவியாகிய சந்திரன். உடனே அந்தப் பெண் பாடி விட்டாளையா 'அத்திக் காய்' என வரும் செய்யுளை. அப்பெண் பாடவில்லை; அப்பெண் பாடியதாகப் புலவர் பாடினூர்.

'ஏ, சந்திரனே! நீ இங்குக் காயலாமோ! ஐயோ! உனது கிரணங்கள் ஆலகால விஷத்தைப்போலன்றோ இருக்கின்றன? கணவனோடில்லாத என்னை நோக்கிக் காய்வதால் என்ன உபயோகம்? என்னிடத்தில் ஒரு சிறிதும் அன்பில்லாத அரசரைக் காய்வாயாக. அரசன் என்னை யடைய முடியாதபடி தடுத்து நிற்கும் பாவை யைக் காய்வாயாக. (மற்றும் ஒருமுறை சொல்கிறேன்.) நீ அரசனையே காயவேண்டும். என்னை அரசன் நினைக் காதபடி பலர் அவனைச் சுற்றி நின்று கொண்டிருக்கின் ரூர்களே! அச் சுற்றத்தார்களை நீ காய்வாயாக. இவ் வளவு கூறியுமா நீ இன்னும் என்னைக் காய்கிருய்! தூ து! நீ விளங்க மாட்டாய்'', என்ருள்.

'எப்படி இருக்கிறது? காய்கள் பழுக்குமா!'

'பழுப்பதா? காயேது கனிய.'

'ஆம். அறிஞர் அண்ணுத்துரையின் கதையும் அப் படியே. பாகற்காயை அபகரிக்க இரு பெண்கள் நினைத்த தாக அவர் கூறினுரே! அப் பெண்கள் குற்றமற்ற வர்கள். ஒருத்தி,

'பந்தலிலே பாவக்கா' என்று அழுதாள். இறந்து விட்டவரைப்பற்றி யழும்பொழுது, 'ஐயோ! வீடிருக் கிறதே! தோட்டம் இருக்கிறதே! அவைகளை விட்டுப் போய் விட்டாரே' என்று கூறி அழுவது வழக்கம். இதோடு விடுவார்களா பெண்கள்!

4

“ தொட்டிலிலே பேரன்
கொட்டிலிலே மாடு
பந்தலிலே பாவக்கா
பறித்துத் தின்னுமல்
மரித்துக் கிடந்தாயே!”

என்றெல்லாம் ஒப்பாரியோடு சேர்த்துக்கொள்வார்க எல்லவா? அப்படியே, ‘பந்தலிலே பாவக்கா’ யென்று ஒருத்தி சொன்னதை, இரண்டாவது பெண், முதல் பெண் ஏதோ பாகற்காயின் மேல் வைத்த ஆசையால் அப்படிக் கூறுகிருள் என்று நினைத்து ‘அதைப்பற்றி இப்பொழுது ஒன்றும் பேசாதே. இழவு வீடாயிற்றே. வீட்டிற்குப் போகும்பொழுது, வீட்டுக்கார அம்மா ளிடம் அனுமதி பெற்றுப் பறித்துச் செல்வோம் என்ப தைக் கூற, ‘போகையிலே பார்ச்துக்குவோம்’ என்று, பிலாக்கணத்தோடு பிலாக்கணமாக அழுதாள்.

வீட்டுக்கார அம்மாளோ அவ்விரு பெண்களையும் நன்ருய் அறிந்தவள். நெருங்கிய பந்து; நெருங்கிப் பழகியவள். பாகற்காய் கொடுக்க முடியாதபடி விதைக்காக விடப்பட்டிருந்தது. அதை மனத்திற் கொண்டு துக்கத்தோடு துக்கமாக, ‘அது விதைக்கல்லோ விட்டிருக்கு’ என்று சொல்லிவிட்டாள். அதை யறி யாத அறிஞர் அண்ணுத்துரை அப் பெண்மணிகள் மேல் காய்ந்து விழுகிருர். எப்படி இருக்கிறது கதை?

‘ஆம், ஆம். அறிஞர் அண்ணுத்துரையின் செய் கையே யப்படித்தான். விபரீதப் பொருள்கொண்டு குற்றம் காண்பதே அவரது வேலை. அல்குலைப் பெண் களின் மறைவிடம் என்றே பொருள்கொண்டு திகைக்

கிறார். 'துஞ்ச' என்றால் 'அருகில் துஞ்ச' என்று கொண்டு அல்லற்படுகிறார். மனைவியைப் பறிகொடுத்து இராமன் அழுதால், 'காமுகன், காமுகன்' என்கிறார், காவிய இலக்கணத்தை யொட்டிக் கம்பர் சிருங்கார ரசத்தைச் சேர்த்துக்கொண்டால் 'காமரசம், காமரசம்' என்கிறார். முற்காலக் கம்பரைத் தற்காலக் கொள்கைப் படி எடை போட்டுப் பார்க்கிறார். நாம் சொன்னோமே உலகம் பலவிதம் என்று, அது அவருக்குப் புரியுமா?

* * *

நதி எப்படி இருக்கும்? மலையிற்றோன்றி, பற்பல கிளை நதிகள் கொண்டுவரும் நீரைக் கப்பமாகப் பெற்றுப் பள்ளங்களை யெல்லாம் நிரப்பி நெருங்கிய குன்றுகளிடை யெல்லாம் ஓடிச் சமவெளியை யடையும். ஆங்காங்கே தோன்றும் வயல்களில் உணவுப் பொருள்களை உண்டாக்கிக் கொடுத்துக் கடலை நோக்கி ஓடும். கடலை யடைவதேது? பற்பல கிளைகளாகப் பிரிந்து செழிப்பான கழிமுகப் பிரதேசத்தை உணவுக் களஞ்சியமாகச் செய்து விடுகிறது. மலையில் தோன்றிய நீர், கடலை யடைய முடியாதபடி செய்யப்படுகிறது; ஆங்காங்கே அணைகளைக் கட்டியும் நீர்த் தேக்கங்கள் ஏற்படுத்தப் படுகின்றன அல்லவா? எல்லா நதிகளும் கடலைச் சேருகின்றன என்று எப்படிச் சொல்ல முடியும்? கம்பருக்கு 'அமேசான்' 'காங்கோ' முதலிய நதிகளைப்பற்றி யொன்றுமே தெரியாது. காவிரி யொன்றையே அவர் அறிவார். நாட்டின் செல்வத்தைப் பெருக்கும் நதிகளைப் புகழாத கவியும் உண்டோ? நதியைப்பற்றிக் கம்பர் என்ன கூறுகிறார்? ஆரணிய காண்டம் சூர்ப்பணகைப் படலம் முதற் செய்யுளைப் பாருங்கள்.

புவியினுக்கு அணியாய் ஆன்ற
பொருள் தந்து புலத்திற்ருகி,
அவியகத் துறைகள் தாங்கி
ஐந்திணை நெறியளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்று
ஒழுக்கமும் தழுவிச் சான்ருேர்
கவியென...................................
...................................நதி இருக்கும்

என்கிருர்.

பூமிக்கோர் அலங்காரமாய்ச் சிறந்த பொருள்களைச் சேர்த்துக் கொடுத்து அகப்பொருள் இலக்கணத் துறைகளை யுடையதாய், ஐந்து திணைகளின் இலக்கணத்தைத் தழுவி, பெரியோர் பாடிய பாட்டைப் போன்றது நதி என்கிருர்.

நதி பூமியாகிய பெண்ணுக்கு ஒரு முத்தாரம் போலிருக்கிறது. சிறந்த மலைபடு பொருள்களைக் கொண்டுவந்து மக்களுக்கு அளிக்கிறது. நீர் வளத்தால் நாட்டில் விளைவுப் பொருளைப் பெருக்குகிறது. அந்நதி, மூழ்குவோரது உடலழுக்கைப் போக்கி மனமகிழ்ச்சியை அளிக்கிறது. இறங்கு நீர்த்துறைகள் பலவற்றை உடையதா யிருக்கிறது. பாலைவனத்தைக் கூடச் செழிப்பாக்குகிறது. அதன் நீர்—ஆழ்ந்த நீர், வளந்தரும் நீர். இன்னும் என்னென்ன சொல்வது?

கங்கையின் உப நதிகளைப் பாருங்கள் :—கௌசி, கண்டகி, கோமதி, யமுனை, சம்பல், சோணு என்பன. சிந்துவின் உப நதிகளைப் பாருங்கள் :—சிலம், சினுப், ராவி, பியாஸ், சட்லிஜ், காபூல், கோமல் முதலியன.

"ஐயையோ! இவை வடநாட்டு நதிகளையா! வடநாட்டுச் சம்பந்தம் அறிஞர் அண்ணுத்துரைக்கு ஆகாதே!" இதோ, தென்னுட்டு நதிகளைப் பாருங்கள். மஞ்சிரா, இந்திராவதி முதலிய உட: நதிகளோடு கூடிக் கோதாவரி உள்ளது. துங்கபத்திரை, பீமாவோடு கூடி கிருஷ்ணு நதி உள்ளது.

காவேரி—கங்கையினும் தீர்த்தமலி காவிரி ; குடகு நாட்டு மலையிற்ருேன்றி குதித்தோடுகிருள். ஹேமாவதி, இலக்குவ தீர்த்தம், கபினி முதலிய உப நதிகளைப் பெறுகிருள். மைசூர்ப் பீடபூமியில் பாய்ந்து ஒடி, பவானி, நொய்யல், அமராவதி முதலிய உப நதிகளை மேலும் பெற்று, இரு கிளைகளாகப் பிரிந்து சிரங்கத்தைச் சுற்றி, மேலும் பல கிளைகளாகப் பிரிந்து—வெண்ணுறு, வெட்டாறு, பாமணியாறு, கோரையாறு, அரசலாறு, திருமலை ராசனுறு, குடமுருட்டி, முடிகொண்டான் முதலிய பல கிளைகளாகப் பிரிந்து, வயல் வளங்களைப் பெருக்கியதால் நீரெல்லாம் இழந்து கடலைத் தீண்டாது போனுளே காவேரி!—சோழ வளநாடு சோறுடைத்து. சிரங்கம் அரங்கனை யுடையது. 'அரங்கனு! அயோத்தி வீரனுகிய இராமன் கொடுத்த தெய்வமல்லவா அரங்கன்?' ஆம். அந்த அரங்கனே! கருவில் திருவுள்ளவருக்குத் தெய்வமாகத் தோன்றும் தெய்வமையா தெய்வம்!!

எங்கிருந்து எங்கு வந்தோம் பார்த்திர்களா? 'கம்ப ரச'த்தை ஆராயப் புகுந்து காவேரி ரசத்தைப் பருகப் புகுந்தோம். 'கள், கலயம்' என்று அலைபவர்களுக்குக் 'கள்' தந்த மரங்களும் காவேரிக் கரையில்

இருந்தன. நெல்லுக்கு உமியுண்டு, நீருக்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டல்லவா?

* * *

அயோத்தியா காண்டம் நகர் நீங்கு படலம் 186 ஆம் பாடல் 'திட ருடைக் குங்குமம்' எனத் தொடங்கு வதைப் பாருங்கள்.

கண் கலுழி ஆறு என்ன செய்தது? மாதரின் மேலே பூசப்பட்டுள்ள குங்குமம் சாந்து ஆகிய வாசனைப் பூச்சுக் களை அடித்துக்கொண்டு அந்த வண்டலோடு அவர்கள் அணிந்துள்ள முத்து மாலைகளைப் பறித்துக்கொண்டு சென்றது. பின்னர் நெருங்கிய தனங்களாகிய மலைச் சிகரங்களினின்று நீங்கி, கணவாய்களை யெல்லாம் கடந்து,

'மேகலைத் தடங் கடலிடைப் புகுந்தது.' பாடுங்கள் ரசிகர்களே, பாடுங்கள் :

"அண்ணாத்துரையின் கம்பரசம்
அதி விநோதக் காமரசம்
கன்னு பின்னுக் கதையாகிச்
சின்ன பின்னப் படுகுதையோ!"

பாடினீர்களா? பாருங்கள். கண் கலுழி யாறு என்ன செய்தது தெரியுமா? அறிஞர் அண்ணாத்துரை நினைக்கிறார், அஃது கடலில் புகுந்ததென்று. எந்தக் கடலில்? காரிகையின் மறைவிடமாகிய கடலில்— பெண் குறியில். கம்பர் என்னவோ அப்படிக் கூறவில்லை. 'மேகலைத் தடங் கடலிடைப் புகுந்த'து என்கிறார் கம்பர். மேகலாபரணம் அணியத் தகுந்த இடைவழியாய்க்

கடலை யடைந்தது என்கிறார். மேகலை யாது என்பதை முன்னேயே கூறினோமல்லவா?

வாருங்களையா, வாருங்கள்.

மலையிற்றோன்றி காவேரி நதி, மலைபடு பொருள்களை யெல்லாம் சமவெளியிற் சேர்த்துப் பின்னர் பல கிளைகளாகப் பிரிந்து பாய்ந்து, நீரை யெல்லாம் இழந்து கடலைத் தீண்டாது என்றோமல்லவா? அவ்விதமே பெண்ணின் தனங்களை யெல்லாம் தாண்டி, சந்தனம், குங்குமம் முதலியவைகளைக் கரைத்துக்கொண்டு, குறுகிய இடையை யடைந்து பல பிரிவுகளாகி, அகன்ற இடமாகிய அடி வயிற்றில் ஓடியது. இதுவே கம்பர் கூறியது. (இடை = இடம்)

காவேரியின் கழிமுகப் பிரதேசத்தைப் (Delta) பாருங்கள். காவேரியின் நீரெல்லாம் பயிர்களுக்குப் பாய்ச்சப்பட்டுப் போகின்றதன்றோ? கடலில் கலப்பது எப்பொழுது? பெரும் வெள்ளம் வந்தாலன்றியுண்டோ? இதை யறிந்திருந்த கம்பர் வெகு சாதுரியமாய் 'மேகலைத் தடங் கடலிடைப் புகுந்தது' என்று கூறி, 'மேகலாபரணம் அணியும் இடுப்பின் கீழேயுள்ள (கடல்போல் அகன்ற) இடமாகிய அடி வயிற்றின்மேல் பல பிரிவுகளாக ஓடியது' என்றார். இது கம்பரது புலமையின் வேலையன்றோ? கடவுட் கதையிலே 'கண் கலுழி ஆறு' செய்தது ஒன்று; அறிஞர் அண்ணாத்துரை கூறுவது வேறு ஒன்று.

---

## எட்டாவது டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து

### கடவுட் கதை கள்ளன்று.

'அவலை நினைத்து உரலை இடிப்பது போல' என்பது பழமொழி. கடவுட் கதையைக் கம்பர் எழுதுவதற்கு முன்னாலேயே திருமாலின் அவதாரங்கள் போற்றப் பட்டு வந்தன. கம்பர் தமது இராமாயணத்தை எழுதியிராமற் போனால், கடவுள் வணக்கம் இல்லாமற் போய் விடாது. உண்மையில் கம்பராமாயணம் இருந்தவிடம் தெரியாமல் வெகு நாட்கள் வரையில் மறைந்திருந்தது. அச்சு வசதி உண்டான பிறகு, பல பிரதிகள் வெளிவந் தன. சைவ, வைணப் பற்றுடையார், தத்தமக்குத் தோன்றியபடி கவி இயற்றி ஆங்காங்கே கம்பராமாய ணத்தில் புகுத்தவில்லை என்று கூற முடியாது. பொது வில் நூலின் பெருமையைக் கூறலாமேயன்றி, பூங்காவி லுள்ள செடிகளெல்லாம் சிறந்தன என்று கூற முடியுமா? ஒருவனிடம் எத்தனையோ நற்குணங்கள் இருந் தாலும், துர்க்குணமே யில்லை என்று கூற முடியுமா?

கம்பர் ஒரு மனிதரே. அவர் தமது கவிதா சக்தி யைக்கொண்டு கடவுட் கதையை எழுதினார். அவருக் குப் பல விரோதிகள் உண்டு. நூலை அரங்கேற்ற வேண் டும். பத்தாயிரம் செய்யுள்களைப் படித்து அரங்கேற் றுவதென்றால் சுலபமான வேலையன்று. ஒவ்வொரு நாளும் எடுத்துப் பாடி அரங்கேற்ற வேண்டிய செய்யுட் களில் பல சுவைகளும் நிறைந்திருக்க வேண்டும். இன்றேல் கேட்பவர் ஒவ்வொரு நாளும் 'சிரக் கம்பம்' செய்யும்படி செய்வது எங்ஙனம்? எனவே கம்பர் அரங் கேற்றுவதாகிய காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்கு

ஆங்காங்கே சிருங்காரத்தைப் புகுத்திக் கொண்டார் அவர் காலம் வேறு; நமது காலம் வேறு. இராமன் கடவுள் அவதாரமே இல்லை என்று சாதிப்பதற்கு கம்ப ராமாயணத்திலுள்ள சிருங்கார ரசத்தைக் காட்ட வேண்டாம். அவலை நினைத்து உரலை யிடிக்க வேண்டாமல்லவா?

எட்டாவது டோஸில் புதிதாக ஒன்றும் கூறப்பட வில்லை. கம்பர் கண்ணபிரானின் கதையை எழுதியிருந் தாரேயானுல் எப்படி இருந்திருக்கும் என்கிருர் அறிஞர். அயோத்தி இராமன் கதை அறிஞர் அண்ணுத்துரைக் குப் பிடிக்காமலிருக்கலாம். சடகோபனை நன்கறிந்து அந்தாதி பாடிய கம்பர், சடகோபன் பாடிய மாயனுகிய கண்ணனைக் 'கூடாரை வெல்லுஞ் சீர் கோவிந்தன்'* என்றே அறிந்து எழுதியிருப்பார். வால்மீகி பாடாத சிங்களைப் பாடிய கம்பர், கண்ணனை, 'மாற்ருரை மாற் றழிக்க வல்லவனுகவே'* செய்திருப்பார்.

ஆங்கிலக் கவியான டெனிசனின் 'காடிவா' வின் நயங்களைப் புகழ்ந்து கம்பரது அறியாமையை 'அம்பல'ப் படுத்துகிருர் அறிஞர்! உண்மையே! நம்மவரில் சிலர் தமிழில் மாத்திரமே உயர்ந்த காவியங்கள் உண்டு என்று சாதிக்கிருர்களே, அஃது எவ்வளவு தவறு என்ப தற்குத் தக்க உதாரணமாம் அறிஞர் கூறுவது. இதை யறிந்தே பாரதி பிற மொழிகளிலுள்ள நயங்களை நாமும் தமிழில் எடுத்தாண்டு கொள்ள வேண்டும் என்ருர். கம்பரும், அவர் காலப் போக்குப்படி,—அவர் காலத்தார் விருப்பம் சென்றபடி,—தமது நூலில் பலவித ரசங்களைப் புகுத்திக் கொண்டார்.

* திருப்பாவை.

அறிஞர் அண்ணுத்துரை முக்கியமாய்ச் சில உவமானங்களை வெறுக்கிறுர். கம்பர் கையாளும் உவமானங்களில் சில கடவுட் கதையில் வருதல் தகாது என்கிறுர். அந்த உவமானங்களை நீக்கிவிடலா மென்றுல், கள்ளில் உள்ள ஈ, எறும்புகளை நீக்கிப் பருகுவதற்குச் சமானம் என்கிறுர். கடவுள் கதையே 'கள்' என்பது போல் இவரது முடிவு ஆகிறதே! வாதத்திற்கு மருந்து உண்டு. பிடிவாதத்திற்கு மருந்து எங்கிருந்து வரும்?

சில பதங்களுக்கு விபரீதமான பொருள் கொண்டு, 'பாருங்கள், கம்பரசம்' என்கிறுர் அறிஞர். தாம் கம்பரது குறைகளை மிகைப்படுத்திக் கூறவில்லை என்கிறுர். சில பதங்களுக்குப் பொருந்தாப் பொருள் கொண்டு கம்பர்மேல் குறை கூறுகிறுர். கவிதை மூலம் ஆரிய மாயையைக் கம்பர் பரப்புகிறுரென்பது உண்மையன்று. தமிழர், தாம் கண்ட உண்மைகளையும், கலைப் பண்புகளையும் எங்கிருந்தாலும் எடுத்தாண்டு, அவைகளைத் தமிழ் மயமாகச் செய்துகொண்டனர். ஆங்கிலத்திலிருந்து தாம் கண்ட 'காடிவா' வின் நயத்தை அறிஞர் அண்ணுத்துரை தமிழில் எடுத்துக் காட்டினுரன்றே? அங்ஙனமே என்க.

வட நாட்டாரது 'கலாசாரம்' தென்னுட்டில் புகுத்தப்பட்டது என்று கூறப்படுகிறது. ஒரு நாட்டாரது 'கலாசாரம்' வேறெரு நாட்டில் புகுவதற்குக் காரணங்கள் பல. தமிழ் நாட்டின் கலாசாரம், பர்மா, இலங்கை கிழக்கிந்தியத் தீவுகள், தென்னுப்பிரிக்கா ஆகிய இடங்களில் பரவியில்லையா? வேண்டுமென்றே புகுத்துவது ஒருவிதம்; வேண்டிப் பெறுவது மற்றெரு விதம். இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் இடாலி

தேசத்துக் கலாசாரம் பிரிட்டிஷ் தீவுகளில் புகுத்தப் பட்டது. எண்ணூறு வருடங்களுக்கு முன் வட சீனவை யாண்டுவந்த குப்ளே என்ற அரசன் ரோமபுரி யின் நாகரிகம் தன் நாட்டிற்கு வேண்டுமெனக் கூறி, அதைப் பெறப் பாடுபட்டான்.

இக்காலத்தில் கலப்பில்லாத கலாசாரம் ஒன்று உளதா? ஆரியம் என்ருெரு கலாசாரம் தென்னுட்டில் புகுந்துகொண்டது என்று கூறப்படுகிறது. கலாசாரக் கலப்பில் பலவித வளர்ச்சியைக் கண்டனர் முற்காலத் தவர். ஆனல் வேண்டுமென்று செய்ததன்று. இன்று ஆரியமென்றும் மற்ருென்றென்றும் பிரித்துக் காண முடியுமா? தமிழுடன் கலந்தவை தமிழ் மயமாகி ஒப் பில்லா 'மறு மலர்ச்சி' பெற்றுத் திகழ்தல் மகிழத்தக்க தன்ருே?

அறிஞர் அண்ணுத்துரை பெரிய பட்டதாரி. அவ ருக்கு இரு மொழிகளில் இணையற்ற அறிவுண்டு. அவர் ஆங்கிலத்திலுள்ள அரிய நூல்களைத் தமிழிற் செய் வாரேயானல், உலகம் அவரைப் போற்றும். தமிழ் 'டெனிசன்' என்று தமிழரால் போற்றப்பட்டால் பெருமை யன்ருே? இரு மொழியாளரின் ஆற்றலும் ஏற்றமும், தமிழை வளர்க்கப் பயன்படுவதாயின், தமிழ ரது நன்றியைச் சொல்லவும் வேண்டுமோ?

தமிழ் நாட்டிலுள்ள ஓர் ஆண் மகன், காந்தாரத்தி லுள்ள ஒரு கன்னியை மணந்து தமிழ் நாட்டிற்குக் கொண்டு வருகிருனென்று கொள்வோம். அப் பெண் ணும், தமிழ் நாட்டாரது நடை, உடை பாவனைகளை யறிந்து, அவைகளின்படி நடக்கிருள். தன் தாய்

மொழியை மறக்கிறுள். ஆடை அணிகலன் எல்லாம் தமிழருடையவை போலாகின்றன. அப்பெண் 'தமிழ் மயம்' ஆகிவிடுகிறுள். இனி அப்பெண் காந்தார நாட்டைச் சேர்ந்தவளென்று கூறவும் முடியுமோ? மாறுதல் வரும் விதங்களுள் இதுவும் ஒன்றே.

அறிஞர் அண்ணுத்துரை ஒரு சீர்திருத்தக்காரர்; பிற்காலத்தில் எப்பொழுதாவது அவர் அரசியல் பொறுப்பை ஏற்கலாம். அதற்கு வேண்டிய ஆற்றல் அவருக்குண்டு. அவர் கம்பரிடம் காணப் புகுந்த குறைகளிலிருந்தே, ஒழுக்கத்தைப் பெரிதும் போற்றுகிறவரென்பது விளங்குகிறது. மனத்தில் தோன்றியதை மறையாது கூறும் மாண்பு அவரிடத்தில் இருக்கிறது. அடிப்படையிற் சில தவறுன எண்ணங்களைக் கொண்டு தொண்டாற்றி வருகிறுர். நாம் முன் கூறினேமே, உலகமே மாறுதலடைந்து வரும்பொழுது யாரே மாருமல் இருக்க வல்லார்?

* * *

'கடவுட் கதை என்ற கவசம் இருக்கவே, கம்பனின் காமச் சேற்றுக்கு லைசென்ஸ் கிடைத்துவிட்டது' என்கிறுர் அறிஞர் அண்ணுத்துரை. கடவுட் கதையில் கம்பர் தரும் சிருங்கார ரசம் வேறு; அறிஞர் அண்ணுத்துரை வலிந்து பொருள் கொண்டு காணும் 'காமச் சேறு' வேறு. மேகலை யாது என்பதை அறிஞர் அண்ணுத்துரை அறியாமற் போனது விந்தையே! அதனுல் வந்த விளைவு ஒரு 'காமச் சேறு.' 'அல்குல்' பெண்களின் அடிவயிற்றையும் குறிக்கும் என்பதை அவர் அறியாமற்போனது மற்ருெரு விந்தை! அதனுல் வந்த விளைவு மற்ருெரு 'காமச் சேறு.' கம்பர் தருவது இள

நீர் அன்று; புளித்த காடியே என்கிறுர் அறிஞர். வலிந்து பொருள் கொண்டு புகுத்தப்படுவதே 'காடி' யாய்த் திகழ்கிறது!

'சோக ரசத்தைத் தெரிவிக்கும் கவிகள் நேர்த்தியாக இருக்கின்றன' என்கிறுர் அறிஞர். 'ஆம்,' என்கிறேம் நாம். அறிஞரின் நேர்மையை மெச்சுகிறேம்.

சோக பிம்பமாக உள்ள மாதரைப்பற்றிக் கம்பர் கூருமல் விட்டாரா என்கிறுர் அறிஞர். வடமொழியின் எல்லையைக் கண்ட கம்பர் தென்மொழியில் பேசும் போது தமது கற்பனு சக்தியை விட்டுவிடுவாரா? தெங்கின் குரும்பையைச் செவிலிக்கும் தாமரையின் அரும்பைச் செவிலியின் தொடையில் தாங்கிய கன்னிக்கும் கொடுத்தார். கம்பர் காமச் சேற்றில் ஆழ்ந்தியிருந்தால், காமச் சுவையைப் பருகி, மதிகெட்டு, அடை மொழிகளை மாற்றியல்லவோ கொடுத்திருப்பார்? அவர் குரும்பையென்றும் அரும்பென்றும் கூறுவன யாவும், காமரசக் கயவர்களைத் தம் நூலை யரங்கேற்றிய காலத்தில் பல்லையிளிக்கச் செய்து மாய்க்கவே! 'வேம்பன்றே காக்கை விரும்புவது' என்பதைக் கம்பர் அறிந்திருந்தாராகையால், காமரசக் காக்கைகளுக்கென்றே தம் நூலில் வேம்பையும் வளர்த்து அதன் காயையும் அக் காக்கைகளுக்கு அவர் காண்பித்தாரென்க.

'உத்தம இராமனின் பிறப்பிடமான அயோத்தி வாழ் மாதர்கள் எப்படிச் சகித்துக்கொண்டனர்?' என்கிறுர் அறிஞர். எதை? ஒளிபுறத் தளித்ததை. பிற்காலத்திற் றேன்றிய கம்பனின் கற்பனையைப்பற்றி அம்

மாதர் யாது அறிவர்? இதை அறிஞர் அண்ணுத்துரை அறியாமற் போனது ஏனே?

---

## ஒன்பதாவது டோஸின் மம்மர் மாய்க்கும் மருந்து கவிகளும் பலவிதமே.

'பொற் கலத்திற் பெய்ய வேண்டிய அமிழ்தினை, அந்தோ! மட்கலத்திற் பெய்திரே' என்று அதிவீரராமர் விளிக்கப்பட்டார்.

'பூவெனப்படுவது பொறி வாழ் பூவே' என்பர் புலவர். 'பூ' என்ருல் இலக்குமி வாசம் செய்யும் தாமரையையே கொள்ளுதல் வேண்டும். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' உலகம் என்று கூறினுல், அதில் வதியும் கல்வியிற் பெரியோரையே குறிக்கும்.

கவி, காவியம் எல்லாம் அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் கடவுளைப் பற்றியே இருத்தல் வேண்டு மென்பர் பெரியோர். எனவே, அதிவீரராம பாண்டியர் எழுதிய புலவர்க் கௌடதமாம் நைடதத்தைத் தேவ கதையாய் இல்லாததுபற்றிக் குறை கூறுவர் சிலர். அந்நூல் 'சென்று தேய்ந்திறுதல்' என்ற குற்றத்தின்பாற் படுமென்பர். ஆயினுமென்ன? அறிஞர் அண்ணுத்துரை கூறுவதுபோல் அதற்குப் பல சிறப்புகள் உண்டு. குற்றம் காண்பது ஒன்றையே கோள்ளாது, குணம் காண்பது உயர்ந்த குணமன்றே? நைடதத்தில் வரும் சந்திரோபாலம்பனப் படலம் மன்மதோபாலம்பனப் படலம் ஆகியவை யெல்லாம் காமச் சுவையைச் சித்திரிப்பனவே. தேவகதை யன்றே யெனினும், பார

தத்தில் வரும் கதை;—வடமொழியில் ஹர்ஷனுலும் இயற்றப்பட்டது.

பெண்களைப்பற்றிப் பேசுவதில் நைடத ஆசிரியர் கையாண்ட முறையைப் புகழ்கிருர் அறிஞர். நாமும் அதை ஆமோதிக்கிருேம். தேவகாதையில் கம்பரது சிருங்காரரச வருணனை வெறுக்கத்தக்க தென்கிருர். அல்குல் என்பதற்குப் பெண்குறி என்ற பொருளைக் கொள்ளாது கொப்பூழின் கீழேயுள்ள அடி வயிறு என்ற பொருளைக் கொண்டால் அறிஞர் அண்ணுத் துரையின், கம்பராமாயணக் காமரசத்தைப் பற்றிய பற்பல ஆராய்ச்சிகளின் முடிவு வேறுபடு மென்பதை அவர் அறிதல் வேண்டும். அதிவீரராம பாண்டியர், கம்பர் ஆகிய இருவருமே வடமொழி இலக்கணத்தை யொட்டிக் காவியம் எழுதத் தொடங்கினர். மங்கை யரை வருணிப்பதில் இருவரும் ஒருவருக்கொருவர் இளைத்தவ ரல்லர்.

நளன் சரிதத்தை எழுதியதற்காக அதிவீரராம பாண்டியர் வருந்தி, தேவ சரிதங்கள் அடங்கிய 'காசி காண்டம்' என்ற நூலை இயற்றியதாகக் கூறுவர். அந் நூலின் முப்பத்து மூன்ருவது அத்தியாயம் 18-ஆம் பாடலைக் கீழே தருகிருேம்.

"குரும ணிப்பொற் கோடிஞ்சியந் தேர்கோலோ
விரைகோள் பூங்கணை வேந்தனத் தாணியோ
உருவ வோடரிக் கண்ணி யோளிர்மணிப்
பருமந் தாங்கிய பையர வல்குலே"

நாம் அதிவீரராமருக்கு விரோதமாக ஒன்றும் சொல்லப் போவதில்லை. அறிஞர் அவரது நேர்மையைப் புகழ்வதில் நாமும் சேர்ந்து கொள்கிருேம்.

கவி வேதநாயகத்தின் நேர்மையைப் புகழ்கிறார் அறிஞர். உண்மையில் கவி வேதநாயகம் சிறந்த கவியே. அவர் இருபதாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர். கம்பர் காலம் எத்தனையோ நூற்றாண்டுகள் முந்தியது.

அறிஞர் அண்ணாத்துரை, தேவகதையாகிய இராமாயணத்தில் காமரசம் வரலாமோ என்பது அடிக்கடி கேட்கும் கேள்வி.

கம்பர் அறுசுவை யுண்டி யளிக்கிறார். அவ்வுண்டியில் பாகற்காயும் உண்டு. மற்ற சுவையுள்ள பொருள்களும் உண்டு.

விருந்தளிப்பவர் ஒருவர். விருந்துண்பவர் பலர். விருந்துண்பவர் பற்பல சுவைகளையுடைய பொருள்களைச் சுவைத்துப் பார்த்து, தாங்கள் உவக்கும் பொருளை மேலும் கேட்டு வாங்கி யுண்பர். ஒருவர் போற்றும் சுவை ஒன்றே யிருக்கலாம். அச்சுவை கசப்பாய்—பாகற்காயாய் இருக்குமேயானால் எப்படியோ, அப்படியே அறிஞர் அண்ணாத்துரை காணும் காமரசம்.

கம்பராமாயணம் இல்லாமற் போனல் காமரசம் உலகத்தில் இல்லாமற் போய்விடாது. கம்பருக்கு முன்னுலிருந்தவர் இராமரை இகழ்ந்து தள்ளிவிடவில்லை. அடிப்படையில் தவறான பொருளைக்கொண்டு, மேலும் மேலும் கடவுட் கதையில் காமரசமா? என்று கேட்கிறார் அறிஞர்.

* * *

ஆம். கடவுட் கதையில் காமரசம் ஏன்? கடவுள் மனிதனாகத் தோன்றி மனிதன் போலவே நடிக்கும்போது,

மனிதனுக்குள்ள ரசங்களைத் தனக்கு மாத்திரம் இல்லாமற் செய்துகொள்வானு? தேவனே அன்றித் தேவியோ தனது தோற்றத்திற்குச் சேர எல்லா ரசங்களையும் பெற்று வாழாது போனுல், அது பொருந்துமா? எனவே, கம்பர் தாம் எழுதிய தேவகாதைக்குத் தகுந்தாற்போல் காமரசத்தையும் கையாண்டார். தேவ கதையேயாயினும், தேவனது மனித அவதாரக்கதை யாகையால் அவர் அங்ஙனம் செய்தார். திருமாலோ திருவை விட்டுப் பிரியாதவன். குறளனுய் மாவலியிடம் மூவடி மண் வேண்டிய காலத்தும், மார்பிலிருந்த திருவை மான் தோலால் மறைத்திருந்தவனுகையால் திருவில்லாத்தேவு திருமாலல்லன் என்பது காணத்தக்கது.

திருவோடு கூடிய திருமாலது திருக்கதையில் காமரசமே வருதல் கூடாதென்பதைத் திருமாலே விரும்ப மாட்டானுகையால், கம்பர் பல ரசங்களோடு அதையும் எடுத்தாண்டார். திருமாலும் தனக்குக் காமரசம் வேண்டுமேன்பதைத் திருமகளை உடைத்தா யிருப்பதினுலேயே நமக்குத் தெரிவிக்கிறுன் என்பதைக் கம்பர் அறிவார். எனவே கடவுட் கதையில் காமரசம் வருதல் கூடாதேன்பது கம்பரது கோள்கையன்று.

கம்பர், 'அல்குல்' என்பதற்குப் பெண்ணின் மறைவிடம் என்ற பொருள் ஒன்றையே கொண்டு எழுதவில்லை என்பதை யறிந்தால் கம்பராமாயணத்தில் அறிஞர் காணப்புகும் காமரசம் உண்மையில் நஞ்சில்லாச் சிருங்காரரசமா யிருப்பதை யறியலாம். 'அல்குல்' என்பதற்குப் 'பெண்களின் மறைவிடம்' என்ற ஒரே பொருளைக்கொண்டு, அந்த எண்ணத்திலேயே ஆழ்ந்திருப்பதால், அறிஞர் அண்ணுத்துரை தவருன பற்பல கேள்விகளைப் பன்னிப் பன்னிக் கேட்கிறுர்.

# கூறுங்கள் தீர்ப்பை.

கம்பராமாயணத்தில் வரும் சிருங்கார ரசத்தை, அறிஞர் அண்ணாத்துரை நஞ்சினுங் கொடிய காமரசமாய் எடுத்துக் காட்டினாரன்றோ? அறிஞரின் மயக்கத்திற்குக் காரணங்கள் இரண்டே:—கம்பர் பெண்களின் மேலிடத்தைப்பற்றிப் பேசுவது ஒன்று; மறைவிடத்தைப்பற்றியே பேசுவதாக நினைப்பது மற்றொன்று.

கம்பர் பெண்களின் மேலிடத்தைப்பற்றிப் பேசியதற்குக் காரணத்தை ஆரும் டோஸின் மறுப்பில் கூறினோம். கம்பர் பெண்களின் மறைவிடத்தைப்பற்றியே பேசுவதாகக் கூறுவதெல்லாம் அறிஞர் அண்ணாத்துரையின் கனவே! அல்குல் என்பதற்கு விபரீதப் பொருள் கொண்டதனால் வந்த மயக்கமேயன்றி வேறன்று. நாம் முதல் டோஸின் மறுப்பில் இறுதியில் கூறியபடி, பரிபாடலில் திருமாலின் அல்குல் பேசப்படுகிறதென்றால் அஃதெங்ஙனம் பெண்களின் மறைவிடத்தை மாத்திரம் குறிக்கக் கூடும்?

பெரும்பாணாற்றுப் படையில்,

‘பகட்டா வீன்ற கோடுநடைக் குழவிக்
கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்குல்’ 144-145

என வருவதில், அல்குல்=பக்கம்.

‘துஞ்ச’ என்பதற்கு முன்னால் ‘அருகில்’ என்று சேர்த்துக்கொண்டு அறிஞர் அண்ணாத்துரை பாரத்துவாசர்மேல் பழி கூறியுள்ளார். பாரத்துவாசர் மாசற்றவரே.

சொல்லின் செல்வனாகிய அனுமன் இராமனது ஒப்பற்ற பக்தன் என்பதைக் கம்பர் நமக்கு எடுத்துக் காட்டியதைத் தமிழ் நாடன்றி, உலகமே போற்றுமன்றோ?

"கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்'' என்று அனுமன் கூறியதாகக் கம்பர் கூறியது ஆழ்ந்த கலைச் செல்வமன்ரோ? கம்பர் 'எக்ஸ்ரே'யை உபயோகி யாத இடத்தில், அவர் அதை உபயோகித்ததாகக் கூறப் பட்டதே! அனுமனது இதயத்தில் ஆழ்ந்திருந்த இராம பக்தியை வெளிப்படுத்துவதன்ரோ கம்பர் கையாண்ட 'எக்ஸ்ரே'.

கம்பர் சிருங்கார ரசத்திற்கு அதிக இனிப்பை யூட்டியதற்குக் காரணம், கம்பராமாயணத்தை அரங் கேற்றுங் காலத்தில் காமரசப் பன்னுடைகளை வென்று வாகை மாலை சூடவே!

'கண் கலுழி யாறு' செய்ததைக் கம்பர் கூறினு ரன்ரோ? கடவுட் கதையைக் காவியமாக எழுதப் புகுந்த கம்பர் கடவுளல்லர், மனிதரே. அவருக்கு அமேசான், காங்கோ நதிகளைப்பற்றி ஒன்றுமே தெரி யாது. அவர் காலத்திற்குப் பிறகே மெகல்லன், லிவிங்ஸ் டன், மங்கோபார்க், ஸ்டேன்லி, ஏனஸ், டீகோ முதலி யவர் வேறு நாடுகளைக் கண்டனர்! காவிரி யொன்றே கம்பர் அறிந்தது. இப்படியும் கம்பர் குண்டு சட்டியில் குதிரை யோட்டலாமா? எல்லாம் தமிழ் நாட்டிலிருந்தே சாதித்துவிட முடியுமா? வேறு கண்டங்களையும் கண்டு தமது அறிவை வளரச் செய்யாமலிருந்தது அவரது குற் றமே! கடலிற் புகாத காவிரியையே அவர் அறிவார்!

இழவு வீட்டில் பாகற்காயைக் கொள்ளையிடச் சதி நடந்ததாக அறிஞர் 'பழி' சுமத்தினரே! 'அத்திக்காய்' முதலிய புலவர் கூறிய காய்கள் எப்படிக் கறிக்கு உத வாமற்போயினவோ, அப்படியே பாகற்காயைப்பற்றிய 'சதி'யும் வீணுயிற்று!

அருச்சுனனது ஒப்பற்ற குறியைப்போல், அறிஞர் அண்ணுத்துரையின் காமரசக் குறி இருக்கவில்லையா ?

அறிஞர் அண்ணுத்துரை அயோத்தி வீரரை, மது+கை+மைந்தர் என்று கூறினுலே போதுமே, மது மைந்தர் என்று கூறவும்|வேண்டுமோ ?

தமிழில் 'அகம்', 'புறம்' என்பன உண்டல்லவா ? கம்பர் கூறிய 'செவிலியின் குரும்பையளவு, கன்னியின் அரும்பளவு' ஆகியவை அகத்தின்பாற் படும். எனவே நாம் அவைகளைப்பற்றி யொன்றும் பேசுவதற்கில்லை !

கம்பர் தமது கதையில் 'கன்னு, பின்னு' என்றெல்லாம் கூறி யுள்ளதாகக் கொண்டாலும், கடவுள்மேல் நமக்குக் கோபம் வரக் காரணமில்லை. கம்பர் கவி, அவர்காலத் தமிழர் கவி. காவியத்தில் காணப்படும் குணங்கள் யாவும் இக்காலத் தமிழருக்கும், பிற்காலத் தமிழருக்கும் சொந்தம்.

"சிந்தா மணியின் நந்தாப் பொருண்மையும்
மணிமே கலையின் அணிகெழு போக்கும்
சிலப் பதிகாரத் திலக்கியச் செலவும்
திருவள்ளுவரின் ஒருமொழி நயமும்
கம்பன் கவியின் சொற்பொரு ளின்பமும்
பத்துப் பாட்டின் வித்தக நடையும்
கல்லா டத்தின் எல்லாச் சிறப்பும்"

இன்னும் பல உயர்ந்த நூல்களும் தமிழருக்குக் கிடைத்துள்ள செல்வம்.

ஆரியர் கொண்டுவந்த தெய்வமென்றே, ஆரிய மொழியிலிருந்து வந்ததென்றே, ஆரியரைப் பின்பற்றுபவர் தந்ததென்றே கொண்டு கம்பராமாயணத்தைத் தள்ளிவிடு

வதா யிருந்தால் அதன் விளைவு யாது? சங்க நூல்களுள், ஆரியக் கலப்பில்லாதது எதுவோ? ஆரியம் வருவதற்கு முன்னர் 'தமிழ் வளம்' உண்டன்றோ? அந்த வளமும் எங்ஙனம் வந்திருக்கும்? பேசிப் பேசியன்றோ? மனத்தில் தோன்றியவைகளை மற்றவர் அறியும்படி பேசி, கேட்பவர் தாம் அறிந்தவைகளோடு சேர்த்து மேலும் மேலும் பேசி, புதியனவாய்த் தோன்றினவைகளைப் புகுத்திக்கொண்டு கற்பனைகளைக் கையாள, அக்கற்பனைகள் மேலும் வளர்ந்து மொழியை வளம்பெறச் செய்யுமன்றோ? புதுக் கற்பனைகள் தோன்றுவது எங்ஙனம்? தமிழ்நாடே யன்றி வேறு நாடுகள் சென்று புதியன காணாமலும், வேறு நாட்டார் தமது கலைச் செல்வத்தைத் தமிழ் நாட்டிற்குக் கொண்டு வராமலும் இது ஆகும் காரியமா? கலை வளர்ச்சி, கலைக் கலப்பால் பெருகுமன்றோ? பழைய தமிழ் வளமும் இவ்விதம் பண்பட்டதே.

எக் காரணத்தினாலோ ஆரியம் தமிழ் நாட்டில் வந்துள்ளது. வடமொழியிலுள்ள சிறந்த கற்பனைகள் தமிழில் எடுத்தாளப்பட்டன. வடமொழி நூல்கள் பல தமிழாயின. வடமொழிக்குச் சொந்தமான கற்பனைகளையும், பொருள்களையும் எண்ணங்களையும் குறிக்கும் வடமொழிப் பதங்கள் தமிழில் தோன்றித் தமிழ் மயமாயின. வடமொழி, தமிழில் எக்காலத்தில் கலக்கத் தொடங்கியது என்பதை யாரே அறியவல்லார்! பழைய சங்க நூல்களில் வடமொழிப் பதங்கள் உள்ளன வென்றால் தமிழும் வடமொழியும் உறவாடப் புகுந்த காலத்தை உறுதியாய் அறியவும் முடியுமோ?

தமிழில் வடமொழிப் பதங்கள் மாத்திரந்தான் உண்டோ? அராபியர், கிரேக்கர், யவனர், போர்த்து கேசியர், உலாந்தா நாட்டவர், பிரஞ்சுகாரர், ஆங்கிலேயர், சீனுக்காரர், சியாம் நாட்டினர் முதலியோர் தமிழ் நாட்டிற்கு வந்தும், தமிழர் அவர்கள் நாட்டிற்குச் சென்றும் வாணிபம் நடத்தவில்லையா? பத்துப் பாட்டில் ஒன்ருகிய பட்டினப்பாலையில் வரும்,

'நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்'

தமிழ்நாடு அறியுமன்ருே? தமிழர் வேறு நாட்டாருடன் பழகுங்கால் அந்நாட்டாருடைய மொழிகளும் அம் மொழிகளிலுள்ள கற்பனைகளும் தமிழில் தோன்ருது வேறு என் செய்யும்?

அங்ஙனமே வடமொழிக் கலப்புத் தமிழில் தோன்றியதென்க. திருமால் வணக்கம் அவ்விரு மொழியாளருக்கும் உண்டாகையால் அக் கடவுளது அவதாரங்கள் காவியங்களாகத் தமிழில் தோன்றின. சிலப்பதிகாரத்தை எழுதியவர் திருமால் பக்தரல்லர். அப்படியிருந்தும் திருமாலின் சிறப்பை அவர் தமது காவியத்தில் புகுத்துவானேன்? தமிழ் நாட்டு மக்கள் கொண்டிருந்த திருமால் பக்தியைப் பேசாது விடுவது, நூலில் குறைகாண இடந்தரும் என்ற கொள்கையாலென்க.

ஆரியச் சம்பந்தமே கூடாதென்று எப்பொழுது கூறுவது?

உண்ட உணவு உடலில் கலந்து இரத்தத்தில் மறைந்த பிறகா? தமிழ் மயமாகி மறைந்த பிறகா? காந்தார நாட்டுப்பெண் தமிழ் மகனை மணந்து, தமிழ் மயமாகி 'கொள்ளுப் பேரன் எள்ளுப் பேரன்' களைப் பெற்ற பிறகா?

தமிழில் வடமொழிச் சம்பந்த முடையவைகளை விலக்கிய பிறகு மிஞ்சுவன யாவை? கம்பராமாயண மும் திருக்குறளும் வெறுக்கப்பட வேண்டும்! சிலப் பதிகாரமும் சிந்தாமணியும் வேண்டுவனவில்லை! திரு விளையாடற் புராணமும் பெரிய புராணமும் தள்ளப்பட வேண்டும். நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடியவை வீண்! எங்குப் பார்த்தாலும் ஆரியர் கை வரிசை! வேறு எங்கு ஐயா, உளது தமிழ்த் தேன்?

தமிழ் மொழிக்குக் 'கதி' கம்பரும் திருவள்ளு வரும் என்பர் பெரியோர். 'அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்' என்றும் கூறுவர் தமிழ் மறையை. குறள், அறம் பொருள் இன் பம் மூன்றையும் கூறி, வீட்டைக் கூறுது கொடுப்பது. மாம்பழம், மாதுளம்பழம் நெல்லிக்கனி ஆகிய மூன்றின் சாற்றை முறையே பிழிந்து தரும் குறள், அமிழ்தினும் இனியது.

ஆம்; திருவள்ளுவர் காலத்திற்கு முன்னிருந்தே மாம்பழம், மாதுளம்பழம், நெல்லிக்கனி ஆகிய மூன்றும் தமிழ் நாட்டில் உண்டு. அவைகளைத் தேர்ந்தெடுத்துப் பிழிந்து, பக்குவமாய்ச் சேர்த்து புதிய இனிய பொரு ளாய், அமிழ்தினும் இனிய குறளாய்த் தமிழ் இலக்கி யத்தின் சிகரமாய், சிந்தையும் மொழியும் செல்லா வீட் டைத் தரும் கவியாய், தமிழர்து ஒப்புயர்விலாச் செல்வ

மாய் என்றும் விளங்கத் தந்தார்—திருக்குறளைத்—திருவள்ளுவர்.

அவ்வளவு மேன்மை வாய்ந்த திருக்குறளை எழுதும் ஆற்றல் திருவள்ளுவருக்கு எங்கிருந்து வந்தது? அவர் தம் காலத்திய நூல்களை யெல்லாம் கற்று, கூடியவரை, பிறமொழிகளிலுள்ளவைகளையும் அறிந்து, கர்ண பரம்பரையாய் வருபவைகளைச் சேர்த்துக்கொண்டு, யாம் கூறிய முக்கனிச் சாற்றைப்போல் முப்பாலையுந் தந்துள்ளார்.

கம்ப நாடரும், திருவள்ளுவரும் தமிழின் இருகண்கள்; தமிழரின் இதயங்கள். அவர்களைப் போற்றத் தமிழ் நாடு முன் வந்துள்ளது. அவர்களது நூல்களைப் போற்றத் தயங்குகிறவர்களும் உண்மையை யறிந்து போற்ற முற்படுவார்களேயானுல் பேசவும் வேண்டுமோ தமிழ் வளர்ச்சியை.

தேவகதை கூறி மக்களைச் சன்மார்க்கத்திலே ஈடுபடச் செய்யக் கம்பன் காட்டும் வழி சரியானதுதானு? என்கிறுர் அறிஞர் அண்ணுத்துரை. அவருடைய ஒன்பது டோசுகளுக்கும் நாம் மறுப்பைக் கூறினேம். தீர்ப்பைக் கூறவேண்டியது தமிழரது கடமை.

தமிழர்களே! தமிழ்ப் புலவர்களே! பத்திரிகாசிரியர்களே! மாணவிகளே! மாணவர்களே! கம்பராமாயணம் வேண்டுமா? வேண்டாமா? கூறுங்கள் தீர்ப்பை.



Printed at Sri Bharathi Press, Choolai, Madras.

